# அன்றும் இன்றும் சிலருக்கு அதே இளந்தளிர் மேனி!




கனிவான பியர்ஸ் சோப்பினால் காத்திடுவீர் உங்கள் மேனி மெருகை. மாணிக்கப் படிகம்போல் மிளிரும் ஒவ்வொரு வில்லையிலும் ஒரு நூறாண்டு கால சோப்-உற்பத்தி அநுபவம் உள்ளிறங்கியுள்ளது. பிஞ்சு மென்மை கொஞ்சும் பியர்ஸ்—தூய்மைக் கொழுந்து—கண்கூடாக நீங்கள் ஊடுருவிப் பார்க்கக்கூடிய உன்னதத் தூய்மை.

**பியர்ஸ் சருமக் களை...**
**கன்னிப் பருவக் களை**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லிண்டாஸ்-PS. 56-140 TM



# கல்கி

ஆடி 10
ஜூலை 25, 1976

## போடு புதிர்!

வட்ட வடிவிலே ஒரு காடு. ஒரு முனையிலிருந்து மற்றொரு முனை ஐந்து மைல் நீளம். ஒரு நாள் ஒரு நரி தவறிப் போய்க் காட்டை விட்டு வெளியே வந்து விட்டது. அங்கே மனிதர்கள் அதை அடித்து விரட்ட ஆரம்பித்தனர். நரி ஓரேயடியாகப் பயந்து காட்டுக்குள் தலை தெறிக்க ஓட ஆரம்பித்தது. காட்டுக் குள்ளே அது அதிக பட்சம் எவ்வளவு தூரம் ஓட முடியும்?

விடை காண இதழைத் தலைகீழாகத் திருப்புங்கள்.

(இப் பகுதிக்கு நேயர்களிடமிருந்து புதுமையான புதிர்களை வரவேற்கிறோம்.)



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

---

# அருள்மிகு சுவாமிநாதசுவாமி திருக்கோயில்

## சுவாமிமலை - 612302 (தஞ்சை மாவட்டம்)

## தங்க ரதம் மற்றும் சொந்தக் குடில் திட்டம்

சுவாமிமலை அருள்மிகு சுவாமிநாதசுவாமி ஆலயத்தின் அருகில் வழிபடுவோர்கள் வசதிக்காக பாதி நன்கொடைத் திட்டத்தின் கீழ் தங்கும் விடுதிகள் கட்டத் தீர்மானிக்கப்பட்டுள்ளது. இத்திட்டத்தில் பங்கு கொள்வோர் குடில் கட்டும் உத்தேச செலவில் பாதி ரூ. 10,000 (ரூபாய் பத்தாயிரம்) நன்கொடையாக அளிக்க வேண்டும். மேற்படி நன்கொடையாளர்களோ அல்லது அவரது அதிகாரம் பெற்றவர்களோ ஆண்டு ஒன்றுக்கு 60 நாட்கள் குடிலில் தங்க உரிமையுடையவர்களாவார்கள். விண்ணப்பங்களை விரைவில் அனுப்பி வைக்க வேண்டப் படுகின்றது.

அத்துடன் சுவாமிமலை ஆலயத்தில் தங்க ரதம் செய்வதற்கு நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டுள்ளது. தங்க ரதம் செய்வதற்கு பொதுமக்கள் பணமாகவோ, தங்கமாகவோ நன்கொடை வழங்க வேண்டப்படுகின்றது. தங்க ரதத்திற்கென்று ஆலயத்தில் தனி உண்டியல் நிறுவப்பட்டுள்ளது.

சுவாமிமலை
12-6-1976

இரா. அரங்கசுவாமி, பி. எஸ்.ஸி., பி. எல்.
செயல் அலுவலர்

# பொன்மயமான நினைவுகள்



செம்மங்குடி தம்பதி
(சஷ்டியப்தபூர்த்தியின்போது)



மகாராஜபுரம்
விசுவநாதய்யர்

இருபதாம் நூற்றாண்டின் தலைசிறந்த சங்கீத வித்வான்களுள் ஒருவராகத் திகழ்ந்து, இசையுலகுக்கு ஐம்பது ஆண்டுகளாக அரிய தொண்டாற்றிப் பொன்விழா காணும் ராஜ்ய ஸேவா நிரத, சங்கீத கலாநிதி செம்மங்குடி ஸ்ரீநிவாசய்யர், திருவிடைமருதூரில் கோட்டு வாத்தியம் ஸகாராம ராவிடம் சிஷ்யராக இருந்தபோது அவருக்குச் சுமார் பத்து வயது இருக்கும். ஒரு நாள் கீவளூர் ராமச்சந்திரய்யர் என்ற பிரபல வித்வான் ஸகாராம ராவிடம் சென்று தியாகராஜ ஸ்வாமியின் அரிய படைப்பாகிய, ''சநி தோடி தேவே'' என்ற கிருதியின் ராகம் ஹரிகாம்போஜியா, கமாஸா என்பதைக் குறித்துத் தீவிரமாக சர்ச்சை நடத்திக் கொண்டிருந்தார். அருகிலிருந்த ஸ்ரீநிவாசய்யருக்கு ஏற்கனவேயே, அந்தக் கிருதி பாடம் உண்டு. அவர் உடனே ''இதன் ராகம் கமாஸ்தான். ஹரிகாம்போஜி அல்ல'' என்று தீர்மானமாகக் கூறி கிருதியில் வரும் சில சங்கதிகளையும் அவற்றின் ஸ்வர அமைப்பையும் பாடிக் காட்டி நிரூபித்தார்.

இளம் வயதிலேயே அவருக்கு அத்தகைய நிச்சயமான ராக ஞானம் ஏற்பட்டிருந்ததில் வியப்பொன்றுமில்லை. பிரபல சங்கீத பரம்பரையில் தோன்றியவர் அவர். தென்னிந்திய வயலின் மேதைகளின் ஜாபிதாவில் பொன் எழுத்துக்களால் பொறிக்கத் தகுந்த திருக்கோடிகாவல் கிருஷ்ணய்யர், ஸ்ரீநிவாசய்யரின் தாய் மாமன் ஆவர். திருக்கோடிகாவல் கிராமத்தில் கிருஷ்ணய்யரின் இல்லத்தில்தான் 1908-ம் ஆண்டு ஸ்ரீநிவாசய்யர் பிறந்தார்.

சில மாதங்களுக்குப் பிறகு செம்மங்குடியில் தமது தந்தையாராகிய ராதாகிருஷ்ணய்யரின் மனைக்கு வந்து சேர்ந்தார். தந்தை ஒரு மிராசுதாரரே எனினும் ஸங்கீதத்தில் ஓரளவு ஞானமும் பஜனை மார்க்கத்தில் ஆர்வமும் உள்ளவராக இருந்தார். தமது குமாரனுக்கு ஸங்கீதத்தில் இயற்கையாக ஏற்பட்டிருந்த ருசியைக் கவனித்த ராதாகிருஷ்ணய்யர் ஸ்ரீநிவாஸனை ஒன்பதாவது வயதிலேயே வயலின் வித்துவான் திருக்கோடிகாவல் நாராயணஸ்வாமி அய்யரிடம் ஒப்படைத்து, ஸங்கீத அப்பியாசத்தைத் துவக்கி வைத்தார். நாராயணஸ்வாமி அய்யர் ஸ்ரீநிவாசய்யரின் பெரிய தாயாரின் குமாரர். திருக்கோடிகாவல் கிருஷ்ணய்யரின் மாப்பிள்ளை. இவரே தமது ஒன்றுவிட்ட தம்பியாகிய செம்மங்குடிக்கு முதல் குருவாக அமைந்ததுடன் பிற்காலத்திலும் உறுதுணையாக நின்று சிறந்த ஸங்கீத போதனையை அளித்தார்.

நாராயணஸ்வாமி அய்யர் தமது குடும்பத்துடன் கும்பகோணத்தில் ஜாகை ஏற்படுத்திக் கொண்ட பின்னர் ஸ்ரீநிவாசய்யர் திருவிடைமருதூர் கோட்டு வாத்தியம் ஸகாராம ராவிடம் சிஷ்யராக அமர்ந்தார். இதற்கிடையில் செம்மங்குடிக்கு அடுத்த தீபங்குடியிலும், திருவிடைமருதூரிலும் உள்ள பள்ளிக்கூடங்களில் கல்வியும் பயின்று வந்தார். தீபங்குடிப் பள்ளிக்கூடத்தின் ஆசிரியர் ஒருவர் தமது காதுகளை இரக்கமின்றித் திருகியதை மறவாத ஸ்ரீநிவாசய்யர் அவர்கள், சில ஆண்டுகளுக்கு முன்னர் தமது முயற்சியினாலேயே செம்மங்குடியில் ஓர் உயர்நிலைப்பள்ளி நிறுவ ஏற்பாடு செய்து தந்தார்.

ஸகாராம ராவிடம் ஸ்ரீநிவாசய்யர் மேற்கொண்ட நான்கு வருட குருகுல வாசம் அவருக்குப் பல துறைகளில் பயனளித்தது.

திருவிடைமருதூர், திருவிசைநல்லூர், கோவிந்தபுரம் முதலிய ஊர்களில் அக்காலத்து சங்கீத சிம்மங்களான கோனேரிராஜபுரம் வைத்தியநாதய்யர் முதலியோர் செய்த கச்சேரிகளைச் செம்மங்குடி அவர்கள் ஒன்று விடாமல் கேட்டுத் தமது ஸங்கீத ஞானத்தை அபரிமிதமாக விருத்தி செய்து கொண்டார்.

ஸகாராமராவின் மனப்பூர்வமான ஆசியைப் பெற்று ஸ்ரீநிவாசய்யர் நேராகக் கும்பகோணம் சென்று மகாவித்துவான் உமையாள்புரம் சுவாமிநாதய்யரிடமும், தமது தமையனார் நாராயணஸ்வாமி அய்யரிடமும் கடுமையான இசைப் பயிற்சியைத் தொடங்கினார். ''பல்லவி வித்துவான்' என்ற விருதைப் பெற்றிருந்த சுவாமிநாதய்யரிடம் ஒரு தூணை சிஷ்யனாக அனுப்பினாலும் அதற்கு அவர் ஸ்வர ஞானத்தைப் புகட்டி அனுப்பி விடுவார்'' என்று செம்மங்குடி அடிக்கடி கூறுவது வழக்கம். இக்காலத்தில்தான் ஸ்ரீநிவாசய்யரின் வாழ்க்கையிலேயே தீவிரமான சாதகத்தை அவர் செய்ய நேரிட்டது. ஆரம்பத்தில் தம்முடன் ஒத்துழையாமை இயக்கத்தைக் கடைப்பிடித்த சாரீரத்தை அகர சாதகத்தினால் வசப்படுத்தி, தமது அபாரமான கற்பனைகளுக்கு அதை ஒரு கருவியாக மாற்றிக் கொண்டார் செம்மங்குடி.

தம்பி ஸ்ரீநிவாசன் சிறந்த ஸங்கீத வித்வானாக விளங்க வேண்டும் என்று அரும்பாடு பட்டவர் அவருடைய தமையனார் பஞ்சாபகேசய்யர் அவர்கள். தேசிய இயக்கம் மும்முரமாக இருந்த அக்காலத்தில் கும்பகோணத்தில் காதி வஸ்திராலயம் ஒன்றைப் பஞ்சாபகேசய்யர் நடத்தி வந்தார். அதன் விளைவாக செம்மங்குடியும் இன்றுவரை கதரைத் தவிர வேறு ஆடை அணிவதில்லை.

எனக்கு ஐந்து வயது மூத்தவராகிய ஸ்ரீநிவாசய்யரை நான் முதன் முதலில் சந்தித்த பொழுது நாங்கள் இருவரும் கும்பகோணம் காமாட்சி ஜோசியர் தெருவில் அக்கம்பக்கத்தில் வசித்து வந்தோம். அவருக்கு வயது பதினேழு இருக்கலாம். கழுத்தில் ருத்திராக்ஷம் அணிந்த ஒல்லியான தோற்றம். மிருதங்க வித்துவான் கோதண்டராமய்யர் வீட்டின் ஓர் அறையில் தங்கியிருந்தார். ஸங்கீத பூபதி மகாராஜபுரம் விசுவநாத அய்யரிடம் மூன்று வருட காலம் இசைப் பயிற்சியை முடித்துச் சொந்தமாகக் கச்சேரி செய்யத் தொடங்கிய சமயம். விசுவநாதய்யர், செம்மங்குடி ஆகிய இருவருமே உமையாள்புரம் சிஷ்ய பரம்பரையைச் சேர்ந்தவர்கள். ஆயினும் மகாராஜபுரத்தின் சாரீர வசதியும், மனோ தர்மமும் யாருமே பின்பற்ற முடியாத அலாதியான அம்சங்களாகும்.

# டி.எஸ்.பார்த்தசாரதி



திருக்கோடிகாவல் கிருஷ்ணய்யர்



மாலியின் கைவண்ணத்தில் செம்மங்குடி



ஸகாராமராவ்



நாராயணசாமி ஐயர்

அவற்றின் சாரத்தை மாத்திரம் ஸ்ரீநிவாசய்யர் கிரகித்துக் கொண்டு தாம் ஏற்கனவேயே உருவாக்கிக் கொண்டு வந்திருந்த 'செம்மங்குடி பாணி'யில் சேர்த்துக் கொண்டார். ''சீனு நல்ல ஸங்கீத பரம்பரையைச் சேர்ந்த ஞானஸ்தன். ஸங்கீதத்தில் ஒரு கோடி காட்டினால் போதும். உடனே பிடித்துக் கொள்வான்'' என்று அக்காலத்திலேயே விசுவநாதய்யர் கூறுவதுண்டு.

1926ம் ஆண்டு முதலே செம்மங்குடி அவர்கள் தனியாகக் கச்சேரிகள் செய்யத் தொடங்கினார். அரியக்குடி, மகாராஜபுரம், முசிரி, செம்பை, மதுரை மணி அய்யர், நாயனாபிள்ளை முதலிய பிரபல வித்வான்கள் இசை உலகில் பிரகாசித்து வந்த காலம் அது.



ரவுடி: கான்ஸ்டேபிள் ஐயா! நானும் பார்த்துக் கிட்டே வரேன். ரொம்ப நேரமா அதோ அந்தப் பொண்ணு என் முன்னாலேயே போயிட்டிருக்கு. கொஞ்சம் கூட்டிப்பிட்டுக் கண்டிக்கிறீங்களா? — உஷா

அவர்களுடன் போட்டியிட்டு 1930-ம் ஆண்டு முதல் இசை உலகில் நிரந்தரமான ஒரு ஸ்தானத்தைப் பெற்று, 'செம்மங்குடி பாணி' என்ற ஒரு தனி நடையையே ஸ்ரீநிவாசய்யர் ஜோடித்துக் கொண்டார். இவருடைய பாணியில் ஈடுபாடு கொண்ட முதல் ரசிகர்களுள் அமரர் கல்கியும் ஒருவர். 'கர்நாடகம்' என்ற புனைபெயருடன் ஆனந்தவிகடனில் ஆடல், பாடல் விமரிசனம் எழுதி வந்த கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் ஓவியர் மாலி வரைந்த அற்புத சித்திரங்களுடன் செம்மங்குடியின் 'இரட்டைநாத' சாரீரத்தையும், மின்வெட்டுக்கள் போன்ற சங்கதிகளையும் புகழ்ந்து பன்முறை விமரிசனம் செய்து, 'செம்மங்குடி விசிறி'களைப் பல்லாயிரக்கணக்கில் பெருகச் செய்தார். அக்காலத்தில் ஸ்ரீநிவாசய்யர் அமோகமாகப் பாடி வந்த ராகங்களுள் கரஹரப்ரியா, ஷண்முகப்ரியா, ஸ்ரீரஞ்சநி, ஆரபி முதலியவற்றைக் குறிப்பிடலாம். செம்மங்குடியின் மூலம் ரசிகர்களின் உள்ளங்களில் நிரந்தர ஸ்தானம் பெற்ற கிருதிகள், ''பக்கல நிலபடி'', ''மாருபல்க'', ''சாலகல்ல'' முதலியன. ''இவ்விளம் வயதிலேயே கர்நாடக ஸங்கீதத்தில் முதன்மை ஸ்தானத்துக்கு அடி போடுகிறார் ஸ்ரீநிவாசய்யர்'' என்று கல்கி அவர்கள் எழுதிய வாக்கு பலித்து, செம்மங்குடி விரைவிலேயே அந்த இடத்தைக் கைப்பற்றினார்.

தமிழ் இசை இயக்கம் தொடங்குமுன்னரே அரியக்குடியும் செம்மங்குடியும் பல தமிழ்ப் பாடல்களுக்கு இனிய மெட்டுக்கள் அமைத்துக் கச்சேரிகளில் பாடி வந்தனர். ராமாநுஜ அய்யங்கார் அவர்கள் ஆழ்வார்களின் பாசுரங்கள், திருப்பாவை, பிள்ளைப்பெருமாள் அய்யங்காரின் அஷ்டபிரபந்தம், அருணாசல கவியின் இராமநாடக கீர்த்தனைகள் முதலியவற்றைப் பாடி வந்தது போலவே ஸ்ரீநிவாசய்யரும் கவி சுப்பிரமணிய பாரதியாரின், ''சொல்லவல்லாயோகிளியே'' ''ஆசை முகம் மறந்து போச்சே'', ''பகைவனுக்கருள்வாய்'' முதலிய செந்தமிழ்ப் பாடல்களுக்கு அழகிய இசை வடிவங்கள் அமைத்து அவற்றை ரசிகர்களிடையே பிரசாரம் செய்தார்.

திருவனந்தபுரத்திலே இயங்கிவந்த மகாராஜா ஸ்வாதி திருநாள் ஸங்கீத அகாடமியில் இசை ஆசிரியர் பதவியை ஏற்குமாறு 1941-ம் ஆண்டில் திருவிதாங்கூர் அரச குடும்பத்தினரிடமிருந்து ஸ்ரீநிவாசய்யருக்கு அழைப்பு வந்தது. அச்சமயம் அக்கல்லூரியில் பிரின்ஸிபாலாக இருந்து வந்த காயக சிகாமணி முத்தய்யா பாகவதர் அவர்கள் வழக்கத்தில் இன்மையால் ஒளி மங்கிப் போயிருந்த மகாராஜா ஸ்வாதிதிருநாளின் கிருதிகளைச் சேகரித்துச் செப்பனிட்டு, அவற்றை ஸ்வரப்படுத்தும் பணியில் ஈடுபட்டிருந்தார். ஸங்கீத சாஸ்திர விற்பன்னரும் சாகித்தியகர்த்தாவுமான முத்தய்யா பாகவதருடன் சேர்ந்து பணியாற்றியதால் தமக்குப் பலவித அநுகூலங்கள் கிடைத்ததையும், தமது அறிவு விசாலமானதையும் ஸ்ரீநிவாசய்யர் இன்றும் நன்றியுடன் நினைவுகூர்கிறார்.

முத்தய்யா பாகவதர் அவர்கள் ஓய்வு பெற்றபிறகு ஸ்ரீநிவாசய்யர் பிரின்ஸிபால் பதவியை ஏற்று ஸ்வாதி திருநாள் அகாடமிக்கு இருபது ஆண்டுகள் இணையற்ற தொண்டு புரிந்தார். இதுவே அவரது சங்கீத வாழ்க்கையின் சிகரம் வைத்தது போன்ற பொற்காலம் எனலாம். மகாராஜாவின் கிருதிகளுக்கு ஸ்வரம் அமைக்கும் பணியை முற்றிலும் பூர்த்தி செய்து புத்தக வடிவில் அவற்றைப் பிரகரிக்க ஏற்பாடு செய்ததுடன், தம்முடைய சங்கீத பாணியை விளங்கச் செய்யப் பல சிஷ்யர்களை உருவாக்கினார். 1956 முதல் மூன்று வருட காலம் சென்னை அகில இந்திய ரேடியோவின் கர்நாடக சங்கீதப் பிரிவின் முதல்வராகச் செயலாற்றி மீண்டும் திருவனந்தபுரம் திரும்பினார். 1963-ல் ஜி. என். பாலசுப்பிரமணியம் அவர்களைத் தமது ஸ்தானத்தில் அமர்த்தி விட்டு அகாடமியிலிருந்து ஓய்வு பெற்றார்.

1945-ல் சென்னை ஸங்கீத வித்வத் சபையில் ''ஸங்கீத கலாநிதி'' விருது அளிப்பதற்காக இவருடைய பெயர் பிரஸ்தாபிக்கப் பெற்ற பொழுது தமது குருநாதராகிய மகாராஜபுரத்திற்கு அந்த விருது கிடைத்த பின்னரே தாம் அதைப் பெற்றுக் கொள்வதாகக் கூறி மறுத்து விட்டார். அவ்விதமே அந்த வருடம் விருது விசுவநாதய்யருக்கு வழங்கப்பட்டது. தியாகராஜ ஸ்வாமியின் நூற்றாண்டு விழா காரணமாக 1946-ல் அந்த விருது ஒருவருக்கும் அளிக்கப் பெறவில்லை. அடுத்த வருடம் ஸ்ரீநிவாசய்யர் ''ஸங்கீத கலாநிதி'' ஆனார்.

தமது குருநாதர்களைத் தவிர, ஸ்ரீநிவாசய்யரின் பெருமதிப்பிற்கும் அபிமானத்திற்கும் பாத்திரமான வித்வான்கள் அரியக்குடியும் முசிரியும் ஆவர். ராமாநுஜ அய்யங்காரின் கட்டுக்கோப்பான கச்சேரி பாணியில் பெருமோகம் கொண்டவர் செம்மங்குடி. திருவனந்தபுரம் அரண்மனையிலும், மற்றும் தனி இடங்களிலும் இருவரும் சேர்ந்து அமோகமாக ஸ்வர கல்பனை செய்து பாடுவதுண்டு. முசிரியின் பாவ பிரதானமான ஸங்கீதத்திலும் உளம் கனிந்த நட்பிலும் மனத்தைப் பறிகொடுத்தவர் செம்மங்குடி.

இவ்வாறு அரை நூற்றாண்டுக் காலம் கர்நாடக இசைக்கு மதிப்பிடற்கரிய சேவை புரிந்து வரும் செம்மங்குடி, கச்சேரி மேடையிலிருந்து தாம் விலகி விடப் போவதாக சமீபத்தில் அறிவித்தது அவருடைய அபிமானிகளுக்கு அதிர்ச்சியையும் ஏமாற்றத்தையும் அளித்தது. அவருடைய இசையைக் கேட்டு மகிழ இன்றும் பல்லாயிரக் கணக்கான ரசிகர்கள் காத்திருக்கின்றனர். ''யந்திரங்களே தேய்ந்து போய் விடுகின்றன. மனிதன் எத்தனை காலம் பாட முடியும்? மேலும், மூன்றுக்கு

வரவேண்டிய இளம் வித்வான்கள் பலர் இருக்கிறார்கள்'' என்கிறார் ஸ்ரீநிவாசய்யர்.

சிரம தசையில் இருக்கும் முதிய வித்வான்களுக்கு வாழ்க்கை நடத்த மாதாமாதம் உபகாரச் சம்பளம் கிடைக்கும்படி சர்க்காரோ தனி ஸ்தாபனங்களோ ஏற்பாடு செய்ய வேண்டுமென்பது செம்மங்குடியின் பேரவாக்களுள் ஒன்று. எப்பொழுதோ ஒரு விருதோ, ஜனாதிபதியின் பரிசோ வித்வான்களுக்கு அளிப்பது போதாது என்பது அவர் கருத்து. ''எனக்காக இதை நான் கூறிக்கொள்ளவில்லை. எனக்குப் பத்மநாபஸ்வாமி படி அளக்கிறார். கஷ்ட தசையில் இருக்கும் பல வித்வான்கள் சார்பில் நான் பேசுகிறேன்'' என்கிறார் அவர். அவருடைய பொன் விழா சம்பந்தமாக நிதி திரட்டி வரும் சிஷ்யர்கள் வயது முதிர்ந்த வித்வான்களுக்கு உதவி புரிவதை ஒரு குறிக்கோளாகக் கொண்டிருப்பதை ஸ்ரீநிவாசய்யர் மனப்பூர்வமாக ஆமோதிக்கிறார்.

ஐம்பது ஆண்டுகளாக இடைவிடாது நாதோபாசனையில் மூழ்கியிருந்த இவர் தாமாகவே ஓய்வு எடுத்துக் கொண்ட பிறகு என்ன செய்யத் திட்டமிட்டிருக்கிறார்? செம்மங்குடிக்குச் சென்று சில காலமாவது தங்கி பஸ்களின் ஆரவாரமும், டீசல் எண்ணெய்ப் புகையின் நறுமணமும் இன்றி இயற்கையுடன் உறவாட வேண்டும் என்பது ஓர் உத்தேசம். பெரியோர்களிடமிருந்து தாம் உபதேசம் பெற்றிருக்கும் மந்திரங்களை ஜபம் செய்து பாக்கி ஆவிருத்திகளைப் பூர்த்தி செய்வது மற்றொரு நோக்கம். தமக்குத் தெரிந்த கிருதிகளை சுத்தமாக ஸ்வர, தாளக் குறிப்புக்களுடன் எழுதி, பின்வரும் சந்ததிகளுக்குக் கிடைக்குமாறு செய்யவேண்டும் என்பதும் ஓர் அவா. ஏற்கனவேயே நூறு கீர்த்தனைகளுக்கு மேல் தமது கையினாலேயே ஒரு நோட்டுப் புத்தகத்தில் முத்துக் கோத்தது போல் எழுதி வைத்திருக்கிறார் ஸ்ரீநிவாசய்யர்.

ஆகவே, கலை நிறைவும், மன நிறைவும் பெற்ற இம்மாபெரும் கலைஞரின் ஓய்வுக் காலமும் இசையுலகுக்குப் பயனுடையதாகவே விளங்கும்.

---

| | | | |
|---|---|---|---|
| ராகு சுக் சூரி | புதன் (வக்ர) சனி | | செவ் புளூட்டோ |
| | 27-3-1912 | | சந்திரன் நெப்டியூன் |
| | | | |
| யுரேனஸ் | குரு (வக்ர) | | கேது |

## பிரிட்டிஷ் பிரதமரின் ஜாதக பலன்!

இது பிரிட்டிஷ் பிரதமர் திரு கல்லகனின் ஜாதகம். அஸ்ட்ரலாஜிகல் மாகஸினில் பிரசுரமாகியிருந்த இந்த ஜாதகத்தைச் சென்னையில் இருக்கும் பிரபல ஜோதிஷர்களில் ஒருவரான திருமதி கே. என். சரஸ்வதி அவர்களிடம் காட்டிப் பலன்களைக் கேட்டோம். அவர் கூறியவை:

இவர் பிறந்த தேதி 27-3-1912. ஆகவே இவருடைய நட்சத்திரம் புனர்பூசம். பிறந்த நேரம் சரியாகத் தெரியாததால் லக்னத்தைக் குறிப்பிட முடியவில்லை. ஆயினும் பலன்களை எழுதி இருக்கிறேன்.

தொழிலாளர்களின் நலன்களில் அக்கறை கொண்ட இவர் தமது சமயோசிதமான ஆழ்ந்த அறிவாலும் அனுபவமுள்ள செயல்களாலும் பிரபலமானவர். பொருளாதார வல்லுனர். நாணய மதிப்பீட்டுத் துறையில் தேர்ச்சியுள்ளவர்.

இவருடைய தோற்றம், திறமை, குணநிலை இவைகளிலிருந்து இவருடைய ஜன்ம லக்னம், 'மேஷம்' என்று யூகிக்கலாம். சந்திரன் பராக்கிரம ஸ்தானத்தில் சொந்த வீட்டில் இருப்பது இவருடைய புத்தி நிட்சண்யத்தைக் காட்டுகிறது. களஸ்தானாதிபதி சூரியன் லக்னாதிபதி சுக்கிரனுடன் சேர்ந்து 11வது வீட்டில் ராகுவுடன் சேர்ந்திருப்பது அரசியலில் இவருக்குள்ள ஆர்வத்தையும் புகழையும் காட்டுகிறது. நாணயமான நம்பிக்கையுள்ள நபர்கள் மூலம் நன்மை பிறக்கும். எனினும் தற்சமயம் நடக்கும் ஏழரை நாட்டுச் சனியாலும் இதர கிரக அமைப்புக்களாலும் அனுகூலமாகத் தெரியவில்லை. தொழில் துறையிலும் கௌரவத்திலும் அங்கங்கே பல குழப்பங்களையும் அமைதியின்மையையும் கிரக அமைப்புக்கள் காட்டுகின்றன.

தற்சமயத்தில் கோசாரத்தில் வரும் குரு காரணமாய்ப் பல எதிர்ப்புக்களிடையே ஜாதகர் இருந்தாலும் இந்த வருடத்துக்குள் பதவிக்கு எந்தவித இடைஞ்சலும் ஏற்படாது. 1977ம் வருடம் பொதுத் தேர்தலுக்கான வாய்ப்புக்கள் காணப்பட்டாலும் இவருடைய பதவிக்காலம் குறைந்தது இன்னும் இரண்டு மூன்று ஆண்டுகள் நீடிக்கும்.

பேட்டி - கே. ஆர்.

(திருமதி கே. என். சரஸ்வதி இப்பொழுது அகில இந்திய ஜோதிஷ சங்கத்தின் துணைத் தலைவர். தமிழ்நாடு பிரிவின் தலைவர்.)




வண்ண வண்ண டிசைன்களில் தாடிகளின் ஸ்டாம்ப் அரசு வெளியிடும்!


தாடியை நம்புகிறவன் புத்திசாலி! ஸ்டாம்ப் போடுகிறவன் மேதாவி!!
கடவுளை நம்புகிறவன் முட்டாள்!


அப்பாடி... உட்டாங்கண்ணேன்!


கொடுக்க முடியாதுன்னு சொன்ன அமெரிக்கா இப்ப நமக்கு யுரேனியம் கொடுக்கப் போகுதுங்க!
அது சரிங்க.. யுரேனியம் பணியுது!.. கடலை எண்ணெய் 'கடுக்காய்' கொடுக்குதே!

# ஒரு பெருஞ் செயல்

ஒரு தட்சிணையாகக் கட்டை விரலை வெட்டித் தந்தான் ஏகலைவன்.

பிறவியிலேயே அமைந்த கவச குண்டலங்களை அறுத்துத் தானம் செய்தான் கர்ணன்.

பெற்ற பிள்ளையைக் கறி சமைத்து இட்டார் சிறுத்தொண்டர்.

'இப்படியெல்லாம் நடக்குமா? கதை அளப்பதானாலும் ஓர் எல்லை இல்லையா?' என்று புராணங்களின் மேல் பாய்ந்தவர்கள் இன்று மூக்கின் மேல் விரல் வைத்து அதிசயிக்குமாறு ஒரு சம்பவம் கண்ணுக்கு மெய்யாக நடந்திருக்கிறது! இவை போன்ற கதைகளைப் புராணங்களில் படித்து மனம் நெகிழ்ந்தவர்கள் மெய்சிலிர்த்துப் போகிற காரியம் நிகழ்ந்திருக்கிறது !

எங்கோ ஆயிரம் மைல்களுக்கு அப்பாலுள்ள சண்டிகரில் ஆறு குழந்தைகளின் தாயார் இரண்டு சிறு நீரகங்களும் பழுதுபட்டுப் போக உயிருக்கு மன்றாடிக் கொண்டிருந்தாள். அவளைக் காப்பாற்ற யாரேனும் ஒரு சிறுநீரகத்தைத் தானம் பண்ண மாட்டார்களா என்ற ஏக்கத்துடன் ரத்தப் பிரிவையும் குறிப்பிட்டுப் பத்திரிகைகளில் விளம்பரம் செய்தனர் அந்தத் தாயின் உறவினர்.

கல்கி
மலர் 35
இதழ் 52



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

தமிழகத்தில் உள்ள இந்திரன் அதனைப் படித்தான். அவன் தந்தையைச் சில ஆண்டுகளுக்கு முன்பு இழந்தவன். தாயன்பிலே வளர்ந்தவன். எனவே தாயன்பு என்றால் என்ன என்பதை நூற்றுக்கு இருநூறு சதம் உணர்ந்தவன். அவன் சிந்தித்தான், 'எனக்குக் கிடைத்த தாயன்பு அந்த ஆறு குழந்தைகளுக்கும் கிட்டாமல் போவதா?' என்று.

பெயர் இந்திரன் என்றாலும் செல்வந்தன் இல்லை. சண்டிகருக்கு ரயில் டிக்கட் எடுத்தால் திரும்பி வரக் காசு இல்லை. ஆயினும் புறப்பட்டு விட்டான், கணமும் தாமதியாமல்.

சண்டிகர் மருத்துவ மனையில் அவனுக்கு விநோத வரவேற்புக் காத்திருந்தது. அந்தத் தாயைப் போலவே வேறு சிலரும் இரு நீரகங்களும் பழுதுபட்டுப் போக, மருத்துவ மனையில் இருந்தனர். அவர்களில் பெருஞ் செல்வந்தர்களும் உண்டு. இந்திரனின் சிறு நீரகத்தை அவர்களுடைய உறவினர்கள், நண்பர்கள் விலை பேசினர்! இரண்டல்ல, இருநூறல்ல, இரண்டாயிரமும் அல்ல. ரூபாய் இருபதாயிரம் வரை ஏலத்தில் அவன் சிறுநீரகத்தின் மதிப்பு உயர்ந்தது! ஆசை காட்டினர்.

இந்திரன் உறுதியாக இருந்தான். 'பணத்துக்காக நான் வரவில்லை. ஆறு குழந்தைகளின் தாயைக் காக்க வந்தேன், காப்பேன்' என்றான்.

அவ்வாறே செய்தும் காட்டினான் இந்திரன். அந்தத் தாய் இந்திரனின் ஒரு சிறுநீரகத்தை ஏற்று மரணப் பிடியிலிருந்து தப்பினாள். சிறுநீரகத்தை வழங்கிய இந்திரன் அந்த மருத்துவமனையிலேயே உடல் தேறி வருகிறான்.

அவனுக்கு, 'மருத்துவர் தேசிய அரங்கம்' ரூ. 1001 பரிசாக வழங்கியது. அதையும் பிரதமர் நிவாரண நிதிக்கு வழங்கினான் இந்திரன்.

எப்பேர்ப்பட்ட தியாகம்! 'உடலின் ஓர் உறுப்பை வழங்குகிறோமே, பின்னால் நமக்கு ஓர் உபாதை ஏற்பட்டால் யார் வழங்குவார்கள்?' என்று யோசித்தானா?

'ஆயிரம் மைல் யார் பயணப்படுவது? டிக்கட் எடுக்கப் பணத்துக்கு எங்கே போவது? முன் பின் தெரியாத சண்டிகர் நகரில் விளம்பரதாரரை எங்கே போய்த் தேடுவது?' என்றெல்லாம் தயங்கினானா?

அதுதான் போகட்டும், அங்கே சென்ற பிறகு, தான் இலவசமாக வழங்கி விடவிருந்த சிறு நீரகத்தின் மதிப்பு இருபதாயிரம் ரூபாய் என அறிந்த பின் மனம் மாறினானா ?

இல்லை, இல்லை, இல்லை !

ஏன்?

ஏனென்றால் இந்திரன் இனிய பாரதத்தினன்; உறுதி கொண்ட நெஞ்சினன் ; தெளிவு பெற்ற மதியினன்; சிறுமை கண்டு பொங்குபவன்; எளிமை கண்டு இரங்குபவன்; — அதனால்தான்!

ஆயிரமாயிரம் இந்திரன்கள் இங்கே தோன்ற வேண்டும். உலக அரங்கில் நம்மைக் கட்டிப் பிடிக்க முடியாத நிலைக்கு உயர்ந்து விடுவோம்.

**கற்றலொன்று பொய்க்கிலாய் வா வா வா**
**கருதியது இயற்றுவாய் வா வா வா**
**ஒற்றுமைக்குள் உய்யவே நாடெல்லாம்**
**ஒருபெருஞ் செயல் செய்வாய் வா வா வா!**

—மகாகவி பாரதியார்

கண்மணிப் பாப்பாவுக்கு மிகச் சிறந்ததென
நீங்கள் கண்டுகொண்ட பவுடர்...




# உங்களுக்கும் மிகச் சிறந்ததே







ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர். உங்கள் அருமையறிந்து உருவாக்கிய அருமையான செல்வம்.
வேறெந்தப் பவுடரிலும் நீங்கள் அனுபவித்தறியாத சொகுசான இன்பம். மலர் மாரி பொழிந்து உடலைத் தழுவும் மென்மை—உலகில் உன்னதமான இயற்கை நறுமணமேந்தி வரும் மென்மை.

இளந்தளிர் மேனிக்கென்றே ஈடிலாத் தூய்மையும் மென்மையுமே உருவான படைப்பு:
ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர். அதனால்தான் 75 ஆண்டுகளாகப் பாப்பா உலகின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக விளங்குகிறது. அதனால் தான் உங்களுக்கும் இதுவே உகந்த பவுடர்.

## ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர்

அருமைப் பாப்பாக்களின் ஆசை இதுவே:
நீங்களும் உபயோகியுங்கள், ஜான்ஸன்ஸ் பேபி பவுடர்

# ஜீவகாருண்யம் ⑬

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசார்ய சுவாமிகள்



நரகத்தில் இருப்பவர்களுக்குக் கூட நம் சாஸ்திரப்படி பரோபகாரம் நடக்கிறது.

திவஸமும், தர்ப்பணமும் செய்கிற போது பூலோகத்திலோ வேறு எங்கோ, எந்த ரூபத்திலோ பிறந்திருக்கிற நம் மூதாதைகளுக்கு அது க்ஷேமத்தைக் கொடுக்கிறது. இங்கே நாம் கொடுக்கிற எள், தண்ணீர், பிண்டம் முதலானவைகளைப் பித்ரு தேவதைகள் நம் மூதாதைகள் எந்த ரூபத்தில் எங்கே பிறந்திருந்தாலும் அதற்கேற்ற ஆகாரமாக மாற்றி அங்கே கிடைக்கச் செய்து விடுவார்கள். நம் நாட்டு ரூபாயை வெளிதேசக் கரன்ஸியாக்க எக்ஸ்சேஞ்ச் பாங்க் இருக்கிற மாதிரி பித்ரு தேவதைகள் இப்படி ஆகாரத்தை மாற்றிக் கொடுக்கிறார்கள்.

செத்துப் போன உடனேயே எல்லோரும் மறுபடியும் இந்த பூலோகத்திலேயே பிறந்து விடுவதில்லை. நன்றாக வேலை செய்தால் இன்க்ரிமெண்ட் மட்டுமல்லாமல் போனஸும் தருகிறார்கள் அல்லவா? ரொம்ப நன்றாகச் செய்தாலோ ப்ரமோஷனே கொடுத்து மேலே தூக்கி விடுகிறார்கள். வேலையில் தப்புப் பண்ணினால் இன்க்ரிமெண்டை நிறுத்தி விடுகிறார்கள். பெனல்டி (அபராதம்) வேறு விதிக்கிறார்கள். ரொம்ப மோசமாகப் பண்ணினால் கீழ் பதவிக்கே தள்ளி விடுகிறார்கள். இதேபோல், புண்ணியம் பண்ணினவர்களுக்கு, இன்க்ரிமெண்ட் மாதிரி இந்த பூலோகத்திலே சௌக்கியமான இன்னொரு ஜன்மா கிடைப்பதற்கு முன்னாடி ஒரு போனஸ் கிடைக்கிறது. ஸ்வர்க்கவாஸம் தான் இந்த போனஸ். ரொம்பப் புண்ணியம் பண்ணியிருந்தால் ஸ்வர்க்க லோகத்துக்கே நிரந்தரமான ப்ரமோஷன். இப்படியே பாபம் பண்ணினவர்கள் முதலில் பெனல்டியாக நரகலோகத்தில் வசிக்க வேண்டும். அப்புறம் இன்க்ரிமெண்ட் இல்லாத மாதிரி பூலோகத்தில் கஷ்டத்திலேயே பிறக்க வேண்டும். ரொம்பப் பாபம் பண்ணினால் கீழ்ப் பதவிக்கே போக வேண்டியது – நிரந்தரமான நரக வாஸம்.

தர்ப்பணம், திவஸம் இவற்றின் பலன் நரகலோகம் தவிர மற்ற லோகங்களில் உள்ளவர்களையே சேரும். ஸ்வர்க்கத்திலேயே பல தினுசுகள்; பல லோகங்கள். இப்படி நரகத்திலும் பல உண்டு. நாம் இறைக்கிற எள்ளும் தண்ணீரும், கொடுக்கிற பிண்டமும் நரக வாஸிகளுக்குப் போய்ச் சேராது.

ஒரு தேசத்துக்கும் இன்னொரு தேசத்துக்கும் சண்டை ஏற்பட்டு விட்டால் அப்போது பணம் எக்ஸ்சேஞ்ச் பண்ணி எதிரி தேசத்துக்கு அனுப்பவே முடிவதில்லையல்லவா? இப்படி, நரகலோக வாஸிகளுக்காகப் பித்ரு தேவதைகள் ஆகார எக்ஸ்சேஞ்ச் பண்ணுவதில்லை.

இப்படிப்பட்ட நரக வாஸிகளான மகா பாபிகளிடமும் நம்முடைய ரிஷிகளுக்கு மனஸ் உருகி, அவர்களுக்கும் க்ஷேமம் உண்டாக்குவதற்காக மந்திரபூர்வமாகச் சில வஸ்துக்களைக் கொடுக்கச் சொல்லி ஏற்பாடு பண்ணியிருக்கிறார்கள். நாம் வேஷ்டியைப் பிழிகிற ஜலம், குளிக்கிறபோது நம் சிகை வழியாக வழிகிற ஜலம் இவை எல்லாம் நரகத்திலுள்ளவர்களுக்கு ஆகாரமாக மாறி, அவர்களுடைய மகா கஷ்டத்தில் கொஞ்சம் கொஞ்சம் சுகம் தருகின்றன. அவர்களை உத்தேசித்து நாம் அன்பான பாவனையோடு துணியைப் பிழிந்தால், தலை மயிர் ஜலத்தைப் பிழிந்தால் இந்தப் பலன் அவர்களுக்குக் கிடைக்கும். மந்திரமும் சொல்லி இந்தக் காரியங்களைச் செய்ய அதிகாரம் பெற்றவர்கள் அப்படியே செய்ய வேண்டும். சாப்பிட்டு முடிந்த பின் எச்சில் கை ஜலத்தை இலைக்கு வலது பக்கத்தில் மந்திரம் சொல்லி விட்டால் அது நரகங்களிலேயே ரொம்பக் கொடூரமான ரௌரவத்தில் எத்தனையோ கோடி வருஷங்களாக இருப்பவர்களின் தாகத்தைத் தீர்க்க உதவுகிறது.

நாம் பண்ணும் பாபத்தையெல்லாம் எத்தனையோ கருணையோடு மன்னிக்கும் பகவான் இப்படி ஒருத்தரை ரௌரவத்தில் போட்டு வதைக்கிறான் என்றால் அவர்கள் செய்திருக்கிற பாவம் ரொம்பவும் பயங்கரமாயிருந்திருக்க வேண்டும். அப்படிப்பட்டவர்களுக்கும் கூட தாகம் தீரட்டும், தாபம் தணியட்டும் என்று பரிவோடு நினைத்து அதற்கான வழியைச் சொல்கிறது நம் தர்ம சாஸ்திரம்.

பௌத்த மதம், கிறிஸ்துவ மதம் மாதிரி நம் மதத்தில் ஜீவகாருண்யத்துக்கு முக்கியத்

---

**[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]**

துவம் தரவில்லை என்று தப்பாக நினைக்கிற வர்கள் இதை யெல்லாம் கவனிக்க வேண்டும்.

'என் நான்கு அறம்' என்று முன்னே சொன்ன முப்பத்திரண்டு மட்டுமில்லாமல் வேத சாஸ்திரங்களில் ஏராளமான தானங் களைச் சொல்லியிருக்கிறது. கர்நாடக ராஜ் யத்தில், ராஷ்டிரகூடக ராஜ்யத்தில் முக்கிய மான ஸ்தானத்தில் இருந்த ஹேமாத்ரி என்றவர் இந்தத் தானங்களை யெல்லாம் தொகுத்து ஒரு புஸ்தகம் எழுதியிருக்கிறார். ''தான ஹேமாத்ரி'' என்றே அதற்குப் பேர். எழுநூறு வருஷங்களுக்கு முன் எழுதிய இந்தப் புஸ்தகத்துக்கு ஆதாரம் அதற்கும் இருநூறு வருஷங்கள் முந்தி லக்ஷ்மீதரர் எழு திய 'க்ருத்ய கல்பதரு'. இப்போது 'கனௌஜ்' என்கிற கான்யகுப்ஜத்தில் வசித்தவர் இந்த லக்ஷ்மீதரர். அதிலே சொல்லாத தானமே இல்லை. தானம் என்றால் பொருளைத் தருவது தான் என்று இல்லை. 'வித்யா தானம்' என்று படிப்புத் தருவது. அணைகள் கட்டி ஜனங்க ளுக்கு உபகாரம் பண்ணுவது முதலான ஸோஷல் ஸர்வீஸ் எல்லாவற்றையுமே அதில் தானம் என்று சொல்லியிருக்கிறது.

வேதத்திலும் தான மகிமை எங்கு பார்த் தாலும் சொல்லியிருக்கிறது. வேத சிரஸான உபநிஷத்துக்களில் ரொம்பப் பெரிசானது 'பிருஹதாரண்யகம்' — அந்தப் பேருக்கு அர்த்தமே 'பெரிய காடு' என்பது. அப்படிக் காடாக விரிந்த அந்த உபநிஷத்தில் ஒரு கதை வருகிறது. உபநிஷத்துகளில் தத்வங்கள் (ஃபிலாஸஃபி) அப்படியே கொட்டிக் கிடப் பது மட்டுமில்லை; நடு நடுவே ரஸமான கதைகள் வரும். இந்தக் கதைகளின் மூலமும் ஒரு பெரிய தத்வம் பிரகாசிக்கும். அப்படி 'பிருஹதாரண்ய'த்தில் கொடையைப் பற்றி ஒரு கதை வருகிறது. (தொடரும்)

# உதவுதல்

நான் உதவ முடியுமா ?
உதவுகிற எண்ணமே இன்றி
உதவ முடியுமா ?

உதவுகிறவன் யார் ?
உதவி பெறுபவன் யார் ?

தவிர்க்க முடியாத அரசியல்வாதி
சமூக சீர்திருத்தவாதி
ஆன்மீகத் தலைவர்
தளபதி
அரசாங்க நிர்வாகி
குடும்பத் தலைவன்
எல்லாரும் உதவுகிறார்கள்
ஆனால் கோருகிறார்கள்
அங்கீகாரம் என்ற வெகுமதியையேனும்.

தன்னந்தனியாக ஒரு மலர்
ஆற்றங்கரையில்
எதற்கும் ஆசைப்படாமல்
யாராயினும் சரி
கபடமின்றி வழங்குகிறது
தன் அழகை
தன் மணத்தை
தன் சகலத்தையும்.

ஒரு வழிப் போக்கன்
சோர்வுற்றவன்
சங்கடத்திலிருப்பவன்
வருகிறான்
அதனைப் பார்க்கிறான்.

அது அவனுக்கு உதவுகிறது
தன்னை யறியாமலேயே.

இடையே ன்று
அது அற்பப் பொருளாகி விடுகிறது
உதவிபெற்றவன் முக்கியத்துவத்தைத்
தானே ஏற்கிறான்
அதனைப் பறிக்கிறான்
மலர் அழிக்கப்படுகிறது.

(டாக்டர் எம். பி. பாஸ்கரன் எழுதிய ஆங்கிலப் புதுக் கவிதையின் தமிழாக்கம்.
Mountain Path July '76)

# புலி டாக்டர்!



ரேவாவில் ஒரு வெள்ளைப் புலி இருக்கிறது. இதற்கு வயிற்றுக் கோளாறு ஏற்பட்டுவிட்டது. பத்து நாட்களாக உணவருந்தவில்லை. மலச் சிக்கல் வேறு.

அபூர்வமான வெள்ளைப் புலியாயிற்றே! எனவே டில்லியிலிருந்தும் ஒரு டாக்டர் பறந்தார். டாக்டர் சர்மா அதனைப் பரிசோதிக்க விரும்பினார். ஒரு சிறிய கூண்டுக்குள் புலியை அடைத்துவிட்டால் பிறகு அதன் வயிற்றைச் சோதிக்கலாம். வயிறு கைக்கெட்டும். புலியின் அறைக்குப் பக்கத்தில் கதவையொட்டினாற் போல் கூண்டை வைத்தார்கள். கூண்டின் கதவைக் கயிற்றால் தூக்கிப் பிடித்துக் கொண்டிருந்தனர் இருவர். புலி கூண்டுக்குள் நுழைந்ததும் கயிற்றை விட்டுவிடுவார்கள். கதவு இறங்கிக் கூண்டை மூடிவிடும்.

ஆனால் இருவாளர் விராடன் இந்த நட வடிக்கைகளால் கலக்கம் அடைந்தது. தன் அறை யின் ஒரு மூலைக்குப் போய்ப் பதுங்கிக் கொண்டது. டாக்டர் சர்மா குதித்தார், கெஞ்சினார், அதட்டினார், கொஞ்சினார், கோலினால் தூண்டிப் பார்த்தார். ஒன்றும் பயன் தரவில்லை. புலியைப் பயமுறுத்தத் தீர்மானித்துப் பட்டாசு வெடித்தனர். கூச்சல் போட்டனர். பயங்கரமாக வெத்து வேட்டுக்களைத் துப்பாக்கியில் வெடித்துத் தீர்த்தனர். புலி அசைந்து கொடுத்தால்தானே ?

இரவு மணி ஒன்பதாகிவிடவே டாக்டர் களைத்துச் சலித்துப் போய் உணவருந்தச் சென்றார். பாதி சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது செய்தி வந்தது. ஆர்ப்பாட்டங்கள் எல்லாம் அடங்கியதும் புலி தானாகவே எழுந்து கூண்டுக்குள் சென்றது; கதவும் இறக்கப்பட்டுவிட்டது!

டாக்டர் சர்மா அவசரம் அவசரமாக இனிமாவுட னும் மருந்துகள் அடங்கிய பையுடனும் விரைந் தார். ஊசி மூலம் சிறிய அளவில் மயக்க மருந்து செலுத்தினார். கூண்டுக் கம்பிகளுக்கிடையில் கையை விட்டு எட்டுகிற தூரத்திலிருந்த புலியின் வயிற்றைப் பிசைந்து சோதிக்கத் தொடங்கினார்.

விராடன் இப்போது குணம் அடைந்துவருகிறது.

-- ஹிந்துஸ்தான் டைம்ஸ்



கொஞ்சம் கற்பனை செய்து பாருங்கள்! ஒவ்வொரு முறையும் நீங்கள் சுவேகா மோபெடில், வேலைக்கோ, கல்லூரிக்கோ, அல்லது வேறு எங்காயினும் சவாரி செய்கையில் செலவழிப்பது, நீங்கள் பஸ் சவாரி செய்திருந்தால் அதற்கு கொடுப்பதைக் காட்டிலும் குறைவே!

இந்த "சுவேகா மோபெட்" ஒரே ஒரு லிட்டரில் 60 கிலோ மீட்டர்கள் உங்களைக் கொண்டு செல்கிறது. அதையும் விட, நீங்கள் உங்கள் நேரத்தை முடிவற்ற வரிசையில் விரயம் செய்யவேண்டாம்; அல்லது நிரம்பி வழியும் ஜனக்கூட்டத்தில், பஸ்ஸில் மூச்சுத்திணறவேண்டாம்; அல்லது வாடகைக் காருக்காகச் செலவிடும் போது கஷ்டப்பட வேண்டாம்! ஆமாம்! உங்களது சுகமான சவாரிக்கெனவே சிறப்பான முறையில் உருவாக்கப்பட்டுள்ளது. அதனுடைய மிக உறுதி வாய்ந்த வடிவமைப்பு செயின்-இயக்கம், சுவேகா மோபெடின் வேகத்திற்கும், சாலையில் நல்ல பிடிப்பிற்கும் ஏற்றதாக அமைந்துள்ளது.

இதைவிட வேறென்ன வேண்டும்? மோபெட் வகைகளிலேயே சுவேகா ஒன்றுதான் வலுவான குரோமியம் செய்யப்பட்ட அலுமினியச்சிலிண்டர்களைக் கொண்டுள்ளது. அவைகள் தொடர்ந்து சீராக இயங்கிக் கொண்டிருப்பதில் ஆச்சரியமில்லை.

ஆம்! வாழ்க்கையில் சில தரம் மிகுந்த பொருட்கள் மலிவாகவுமிருக்கின்றன!

இரண்டு அழகிய மாடல்கள். கண்ணைக் கவரும் வண்ணத்தொகுப்பு.

மோபெட்ஸ் இந்தியா லிமிடெட்,
திருப்பதி, ஆந்திரப் பிரதேசம்.

# டாக்ஸியில் செல்வது போல் அதன் பயணம். செலவிடும் பணமோ பஸ்ஸில் செல்வதைவிடக் குறைவு!



SAA/MIP/1654

# Suvega

சுவேகா — இந்தியாவில் மிக அதிகமாகத்
தேவைப்படும் மோபெட்

டீலர்கள்: மெஸர்ஸ் வி.கே ஏஜன்ஸீஸ், 4142, கீழ வீதி, புதுக்கோட்டை ○ மெஸர்ஸ் செந்தில் மோட்டார் ஏஜன்ஸி, 1, கச்சேரி ரோடு, கோபிச்செட்டிபாளையம் ○ மெஸர்ஸ் J & D & கம்பெனி, 2851/1-P, திருச்சி ரோடு, தஞ்சாவூர் ○ மெஸர்ஸ் சாந்தி இண்டஸ்ட்ரீஸ், 89, லாரன்ஸ் ரோடு, கடலூர் ○ மெஸர்ஸ் லக்ஷ்மி ஆட்டோ சர்வீஸ், பை-பாஸ் ரோடு, தர்மபுரி ○ மெஸர்ஸ் சத்யநாராயணா ஏஜன்ஸீஸ், 135, பெருந்துறை ரோடு, தர்மபுரி ○ மெஸர்ஸ் ஸ்ரீ கிருஷ்ணா ஏஜன்ஸீஸ், 43, குமரன் ரோடு, திருப்பூர் ○ மெஸர்ஸ் S. V. டிரேடர்ஸ், 502, காந்தி ரோடு, காஞ்சிபுரம் ○ மெஸர்ஸ் சித்ரா ஏஜன்ஸீஸ், 42-B, மெயின் ரோடு, மேட்டுப்பாளையம் ○ மெஸர்ஸ் லக்ஷ்மி ஏஜன்ஸீஸ், 10-E, திருவனந்தபுரம் ஹைரோடு, பாளையங்கோட்டை, திருநெல்வேலி-2

# புது உலகம் கண்டேன்!

## 3. மியூஸியங்கள், கலைக்கூடங்கள்

வெளிநாடுகள் பல சென்ற இலக்கிய நண்பர் ஒருவரிடம் பேசிக் கொண்டிருந்தேன்:

''பாரதியார் நூற்றாண்டு விழா விரைந்து வருகிறது. அந்த மகா கவி பிறந்து ஒரு நூறாண்டு ஆகியும் கூட அவருக்கு அவர் பிறந்த ஊரிலோ, வாழ்ந்த சென்னையிலோ சரியான 'லிட்டரரி மியூஸியம்' போல ஒரு நினைவுச் சின்னம் அமையவில்லை பார்த்தீர்களா?'' என்று அந்த நண்பர் சில நாட்களுக்கு முன் என்னைக் கேட்டார்.

''ஏன்? கல்கி அரும்பாடு பட்டுக் கட்டிய பாரதி மண்டபம் எட்டயபுரத்தில் இருக்கிறதே?'' என்றேன் நான். ''ஆம்! நினைவு மண்டபம் என்ற வகையில் அது ஒன்றுதான் இருக்கிறது. ஆனால் லண்டனில் ஹாம்ப்ஸ்டெட்டில் (Hamstead) உள்ள 'கீட்ஸ் ஹவுஸ்' போலவோ ஸ்ட்ராட்ஃபோர்டில் உள்ள ஷேக்ஸ்பியர் இல்லத்தைப் போலவோ, சோவியத் யூனியன் முழுவதிலும் டால்ஸ்டாய், செகாவ், கார்க்கி, புஷ்கின், டாஸ்டயேவ்ஸ்கி போன்றவர்களின் லிட்டரரி மியூஸியம் போலவோ நம் நாட்டில் பழைய எழுத்தாளர்களுக்கும் கவிஞர்களுக்கும் இல்லையே? சோவியத் யூனியனிலும் இங்கிலாந்து முதலிய பிற ஐரோப்பிய நாடுகளிலும் கவிஞர்கள், எழுத்தாளர்கள் சம்பந்தப்பட்ட லிட்டரரி மியூஸியங்களை எவ்வளவு செம்மையாகவும் பிரமாதமாகவும் அமைத்திருக்கிறார்கள்!'' என்று ஏக்கத்தோடு சொன்னார் என் நண்பர்.

அவர் சுட்டிக் காட்டியது சரி என்றே எனக்கும் தோன்றியது. சோவியத் யூனியனில் உள்ள மியூஸியங்கள், ஓவியச் சாலைகள் கலைக்கூடங்களைப் பார்த்தவர் என்றும் மறக்கவே முடியாது. எல்லா ஐரோப்பிய நாடுகளிலும் கவிஞர்கள், எழுத்தாளர்கள், ஓவியர்களைச் சிறப்பாக நினைவுகூர்ந்து கொண்டாடுகின்றனர். இத்தாலியின் தலைநகரான ரோமாபுரியின் சர்வதேச விமான நிலையத்துக்குப் புகழ் பெற்ற ஓவியர் லெனார்டோ டா வின்சியின் பெயரைச் சூட்டியிருக்கிறார்கள். மாஸ்கோவில் மாயக்காவஸ்கி சதுக்கம், புஷ்கின், கோர்க்கி சதுக்கங்கள், பூங்காக்கள் என்பவை சகஜமாகக் காணக் கூடியவை. மாயக்காவஸ்கி சதுக்கத்தின் அருகே உள்ளே அருமையான மெட்ரோ ஸ்டேஷனுக்கு அந்த மக்கள் கவிஞரின் பெயரே சூட்டப்பட்டிருக்கிறது. கோர்க்கி தெரு என்பது மாஸ்கோவில் உள்ள ஒரு பிரதானமான பகுதியின் பெயர். புஷ்கின் என்ற ஒரு நகரே ஒரு பெரிய கவிஞரின் பெயரைப் பெற்றுள்ளது.

இங்கிலாந்தில் 'சார்ல்ஸ் டிக்கன்ஸ்', 'ஓல்டு க்யூரியாஸிடி ஷாப்' என்ற நாவலை எழுதத் தூண்டுதலாக இருந்த பழம் பொருட் கடை ஒன்றை இன்றும் லண்டன் நகரில் இர்விங் தெருவில் அப்படியே — அன்றிருந்த கோலத்தில் பத்திரமாகப் பாதுகாத்து வருகி







■ லெனின்கிராடில் ருஷ்ய மியூஸியம் எதிரே புஷ்கின் சிலை.

■ மாஸ்கோ ஓவியக் கண்காட்சியில் வெரெஷ்சாகின் தீட்டிய இந்தியா வைப் பற்றிய ஓவியங்கள்.

■ தாஷ்கெண்டில் லெனின் மியூஸியம்.

■ மாதெந்தரான் பழஞ் சுவடிகள் தாப்பகம்.



நா.பார்த்தசாரதி

ளர்கள். *Old Curiosity Shop-Immortalised by Charles Dickens* என்ற எழுத்துக்கள் . அந்தப் பழம் பொருட் கடையின் முகப்பில் பெரிதாக எழுதப் பட்டுள்ளன.

சோவியத் யூனியனில் மியூஸி யங்களும், ஓவியச் சாலைகளும் எழுத்தாளர்களின் நினைவு இல் லங்களும், நினைவுச் சின்னங் களும், மிக அருமையாக அமைக்கப் பட்டிருக்கின்றன. மாஸ்கோவில் உள்ள மிகப் பெரிய ஓவியச்சாலை ஒன்றை ஒரு நாள் முழுமையும் செல வழித்துப் பார்க்க வேண்டி யிருந்தது. பாக்கூ நகரில் உள்ள வண்ணக் கம்பளங்கள் அடங்கிய பொருட் காட்சி (*Carpet Museum*)யில் அந்த மாநிலத்தின் முக்கிய தொழிலாகிய கம்பள நெசவின் திறமைகள் எல்லாவற்றை யும் காண முடிந்தது. அர்மேனியாவின் தலைநகரான எரவான் நகரில் உள்ள மாபெரும் சுவடிகள் மியூஸியமான (*Matendaran ancient Manuscripts Depository*) மாதெந்தரானில் 1794ம் ஆண்டு சென்னை நகரில் அச்சிடப் பட்ட *Azdabar Trumpet* என்ற அர் மீனியப் பத்திரிகையின் பிரதி ஒன்று காட் சிக்கு வைக்கப்பட்டுள்ளது. அர்மீனியாவுக் கும் இந்தியாவுக்கும் இடையில் உள்ள கலா சார உறவின் பழைமை அதில் தெரிந்தது. 'சென்னையில் இன்னும் அர்மீனியர்கள் வசிக் கிறார்களா?' என்று அந்த மியூஸியத்திலிருந்த வழிகாட்டி விளக்கும் பெண்மணி ஆவ லோடு விசாரித்தாள். சோவியத் யூனியனின் மற்றொரு குடியரசாகிய ஜார்ஜியாவின் தலை நகரான டிபிலிஸியில் உள்ள மிகப் பெரிய வரலாற்று மியூஸியத்தில் (*Historical Musuem*) தனித் தனிப் பிரிவுகள் இருந்தன. ஒவ்வொரு பிரிவை விளக்கவும் வேறு வேறு வழிகாட்டி விவரிக்கும் பெண்மணிகள் இருந்தனர். இரண்டு பகுதிகள் சுற்றிப் பார்த்த பின், மூன்றாவது பகுதியின் முகப்பில் 'ஃப்யூடல் செக்ஷன்' என்று போட்டிருந்தது. எங்களது முந்திய வழிகாட்டி, ''ஐயாம் நாட் அன் எக்ஸ்பர்ட் இன் ஃப்யூடல் செக்ஷன். ஸம் அதர் கைட் வில் கம் அண்ட் டேக் யூ'' என்று புன்முறுவலுடன் எங்களுக்கு விடை கொடுத் தாள். அப்படி ஒவ்வொரு பகுதி மியூஸியத் துக்கும் அந்தந்தப் பகுதி பற்றி முழு விவரமும் அறிந்தவர்களையே வழிகாட்டிகளாக நியமித் திருந்தார்கள்.

எல்லா ஊர்களிலும் எல்லா மியூஸியங் களுக்கும் அநேகமாகத் திங்கட் கிழமை விடுமுறை நாள். சோவியத் யூனியனிலேயே மிகப் பெரியதும், உலகின் சிறந்த மியூஸியங் களில் ஒன்றுமாகிய 'ஹெர்மிட்டேஜ்'— (*Hermitage*) லெனின் கிராட் நகரத்தில் இருக் கிறது. 'ஹெர்மிட்டேஜ்' மியூஸியத்தை முற்றுகப் பார்த்து முடிக்க மாதக்கணக்கில் கூட ஆகலாம். ஆயிரக்கணக்கில் காட்சிப் பிரிவுகள் உள்ள அதில் மில்லியன் கணக்கில் அபூர்வப் பொருள்கள் உள்ளன. பல்லாயிரம் பகுதிகள் உள்ளன.

ருஷ்ய நாட்டின் பழைய ஜார் மன்னர் களின் மிகப் பெரிய குளிர்கால அரண்மனை



''தண்ணீரில் நெருப்புப் பற்றினால் அதிலுள்ள மீன்கள் என்ன வாகும்'' என்று ஒருவர் அசந்தியைக் கேட்டார்.

அசந்தி சொன்னான்: ''தண்ணீரில் நெருப்புப் பற்றினால், மீன்கள் மரத்தில் ஏறிவிடும்!'' — கோ. கு.

(Winter Palace) யில்தான் இப்போது 'ஹெர்மிட்டேஜ்' மியூஸியம் வைக்கப்பட்டிருக்கிறது. அந்த மாளிகையும் போதாமல் பல்வேறு பகுதிகளில் பிரித்துக் காட்சிப் பொருள்களை வைக்க வேண்டிய அளவு 'ஹெர்மிட்டேஜ்' மியூஸியப் பொருள்கள் விரிவடைந்து கொண்டே போகின்றன.

பழங்காலப் பொருட்களை அவை இருந்த நிலை எப்படியோ அப்படியே பேணுவதில் சோவியத் மக்களுக்குள்ள அக்கறையை இந்த மியூஸியத்திலும் காண முடிந்தது.

ஜார் மன்னர்களின் தர்பார் மண்டபம் போன்ற ஒரு பகுதியில் முன்பு பொன் வண்ணம் பூசி இருந்ததாம். அன்று அந்த தர்பார் மண்டபம் எப்படி இருந்ததோ அப்படியே இன்றும் மியூஸியத்தைப் பார்க்க வருகிறவர்களுக்குத் தோன்ற வேண்டும் என்பதற்காகச் சுமார் எட்டுக் கிலோ அளவுக்குத் தங்கத்தைப் பெயிண்டாக உருக்கி அப்பகுதிக்குப் பளீரென்று பொன் வண்ணம் பூசியிருந்தார்கள். வழிகாட்டும் பெண்மணி அந்த விவரத்தை ஆர்வத்தோடு விளக்கிச் சொன்னாள். அப்பகுதி மண்டபம் தேஜோமயமாகப் பொன்னொளி வீசிக் கொண்டிருக்கிறது. இப் பொருட்காட்சியில் இந்தியா ஜப்பான், இந்தோனேஷியா, என்று கீழை நாட்டுப் பொருள்களுக்கு வேறு வேறான கூடங்கள் ஒதுக்கப்பட்டுள்ளன. விநாயகர், விஷ்ணு சிலைகள் கூட அப்பகுதிகளில் உள்ளன. லெனின் கிராட் நகரத்தை 'அமைதியான சங்கீதம்' (Silent Music) என்று வருணிக்கிறார்கள். 'நிசப்த சங்கீதம்'— என்ற அடைமொழிக்கு முற்றிலும் பொருத்தமான நகரம் அது. வரலாறும், கல்வி கலாசாரமும், எழிலான அமைப்பும் இணைந்த நகரம் அது. 'ஹெர்மிட்டேஜ்' என்ற மாபெரும் மியூஸியத்தைத் தவிர மேலும் இருபதுக்கு மேற்பட்ட மியூஸியங்கள் பல்வேறு வகைகளில் அந்நகரில் இருக்கின்றன.

புரட்சிக்கான முதல் அறைகூவல் எந்தக் கப்பலிலிருந்து ஒலித்ததோ அந்த 'அரோரா' கப்பலையே ஒரு சிறு மியூஸியமாக இன்னும் பேணிக் காத்து வருகிறார்கள். நேவா நதியில் மிதந்து கொண்டிருக்கிறது அது. லெனின் கிராட் நகரின் அழகுக்கே அழகு செய்வது போல் நேவா நதி மாலை மாலையாக எல்லா இடங்களிலும் நகரை ஊடறுத்துப் பாய்கிறது. நகரமே பல தீவுகளாக விளங்குகிறது.

முன்பு யுத்த காலத்தில் நாஜிப் படைகள் அழித்த சர்ச்சுகள், மாளிகைகள் முதலிய நினைவுச் சின்னங்களை யெல்லாம் கூட அவற்றின் வரலாற்று முக்கியத்துவத்தைக் கருதி நிறையப் பொருட் செலவில் முன்பிருந்த படியே மறுபடியும் புதுப்பித்து வருகிறார்கள். இந்தப் புதுப்பிக்கும் வேலை இன்னும் நடந்து கொண்டிருக்கிறது. இதற்காக அவர்கள் பயன்படுத்தும் நேரமும் பொருளும், வினை நுட்ப வல்லுநரும் மிக அதிகம். கலை ஆர்வத்தாலும் அவை தம் நாட்டைச் சேர்ந்தவை என்ற பெருமிதத்தாலுமே இதை அவர்கள் செய்கிறார்கள். சோவியத் நகரங்களில் யுத்தம் மிக அருகே வந்து கதவைத் தட்டிய நகரம் லெனின்கிராட். அதனால் அங்கே பல வருடங்களாகியும் புதுப்பிக்கும் (Restoration) வேலைகள் இன்னும் இடைவிடாமல் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. லெனின் கிராட் அருகே உள்ள புஷ்கின் நகரில் (பழைய பெயர் ஜார்ஸ் கோயே செலோ) ஜார் அரசர்களின் வேனிற்கால அரண்மனை (Summer Palace) இருக்கிறது. அதிலும் மியூஸியம் உண்டு. அந்த அரண்மனைப் பகுதி நாஜிகளிடம் பிடிபட்டுப் பலத்த சேதத்துக்கு ஆளானது. என்றாலும் மீட்ட பிறகு பழையபடியே புதுப்பித்திருக்கிறார்கள். இன்னும் புதுப்பிக்கிற வேலை முடிந்து விடவில்லை. நடந்து கொண்டிருக்கிறது. லெனின்கிராடின் பழைய பெயர் பீட்டர்ஸ் பர்க் என்று இருந்தது. பின்பு தலைவர் லெனின் பெயரில் மாற்றப்பட்டிருக்கிறது.

இனி எழுத்தாளர் மியூஸியங்களைப் பார்க்கலாம். சோவியத் யூனியனில் உள்ள எழுத்தாளர் நினைவுச் சின்னங்களையும், மியூஸியங்களையும் பார்த்தால்தான் மகா கவி பாரதிக்கு நாம் எப்படிப்பட்ட நினைவுச் சின்னம் இன்னும் இங்கு அமைக்கவில்லை என்பது நமக்குப் புரியும். சோவியத் லிட்டரரி மியூஸியங்கள் வெறும் கட்டிடங்களோ, சம்பந்தப்பட்டவர்களின் புகழ் பெற்ற பெயரைத் தாங்கி நிற்பவையோ மட்டுமில்லை. டால்ஸ்டாய் பலகாலம் வாழ்ந்த யாஸ்னயா பல்யானு (Yasnaya Palyana) என்ற இடத்துக்குப் போனால் டால்ஸ்டாயைப் பற்றிய முழு விவரங்களும் தெரிந்துவிடும். மாஸ்கோவிலிருந்து வெளியே தொலைவில் போய்த்தான் அந்த இடத்தைப் பார்க்க முடியும் என்பதால் மாஸ்கோவுக்கு உள்ளேயே 'டால்ஸ்டாய் ஹவுஸ்' என்று ஒரு மியூஸியம் இருக்கிறது. அதில் டால்ஸ்டாய் தொடர்புடைய சகலமும் இடம் பெற்றுள்ளன. டால்ஸ்டாய் குடும்பத்தினர், குடும்பத்தோடு தொடர்புடையவர் படங்கள், வரலாறு, கையெழுத்துப் பிரதிகள், உபயோகித்த பண்டங்கள், எழுதிய நூல்கள், எல்லாம் இருந்தன. இதுவரை டால்ஸ்டாய் நூல்கள் எந்தெந்த மொழிகளில் மொழிபெயர்ப்பாகியிருக்கிறதோ அவ்வளவு டால்ஸ்டாய் மொழிபெயர்ப்புக்களையும் அங்கு வைத்திருக்கிறார்கள். தமிழில் டி. எஸ். சொக்கலிங்கம் மொழிபெயர்த்த 'போரும் வாழ்வும்' (War and Peace) சக்தி காரியாலய வெளியீடு என் கண்களில் பட்டது. அந்த மியூஸியத்தில் பொருட்கள் வைக்கப்பட்டிருக்கும்

# இனிமை கொஞ்சும் சில நேரங்களில்...

உங்கள் உள்ளம் கவர்ந்த அவளுக்கு ஒன்றோ அல்லது அத்தனையுமோ அன்புடன் கொடுங்கள். அவளுக்கு அன்புடன் கொடுப்ப்தற்கென்றே உள்ள பாரியின் மிட்டாய் வகைகள்: சாக்லேட் எக்ளேர்கள், கோகநட் எக்ளேர்கள், பைன் ஆப்பிள் லிக்கர்கள், ஆரஞ்சு லிக்கர்கள், லாக்டோ பான் பான்கள் மற்றும் ஆரஞ்சு கேண்டிகள்.




**வாழ்வில் இனிமை விரைந்து பரவிடவே-பாரீஸ்**

பாரீஸ் கன்பெக்ஷனரி லிமிடெட்
சென்னை 600 001.

PRS/2146



**காபூலில் (ஆப்கானிஸ்தான்) நீளமான ஒரு சினிமாவைப் பார்க்க வேண்டுமானால் இரண்டு டிக்கெட்டுகள் வாங்க வேண்டும். அங்கு தமாஷா வரி கிடையாது.**

—ஃபிலிம் ஃபேர் - சரோஜா ராமச்சந்திரன்

---

வரிசை முறை, ஒழுங்கு, சிரத்தை எல்லாம் வியக்கத்தக்கவை. டால்ஸ்டாயைப் பற்றி எதுவுமே அறியாத பாமரன் ஒருவன் அந்தக் காட்சி சாலைக்குள் நுழைந்து வெளியேறினால் கூட முழு அறிமுகமும் ஓர் அபிப்பிராயமும் கிடைத்துவிடும்.

மாஸ்கோவில் இப்படியே கோர்க்கி ஹவுஸ், செகாவ் ஹவுஸ், புஷ்கின் ஹவுஸ் என்று தொடங்கி எல்லாப் பெரிய எழுத்தாளர்களுக்கும், கவிஞர்களுக்கும் இலக்கியப் பொருட்காட்சிகள் இருக்கின்றன. கோர்க்கி ஹவுஸில் சப்தம் கேட்காமல் — சுற்றிப் பார்ப்பதற்கு உங்கள் பூட்ஸ்களுக்கு மேலே அணிந்து கொள்ளக்கூடிய மிருதுவான கான்வாஸ் காலணிகள் தரப்படுகின்றன. கோர்க்கி புகைத்துவிட்டு 'ஆஷ் டிரே'யில் போட்ட கடைசி சிகரெட் துண்டு கூடப் பத்திரப்படுத்தப்பட்டுப் பார்வைக்கு அங்கே வைக்கப்பட்டிருக்கிறது. கோர்க்கி அமர்ந்த நாற்காலி, படுத்த படுக்கை, எழுதிய பேனாக்கள், கையெழுத்துப் பிரதிகள் எல்லாமே அக்கறையோடு சேகரித்து வைக்கப்பட்டிருக்கின்றன. ரஷ்யாவில் எங்கெங்கிருந்தாலும் இந்த லிட்டரரி மியூஸியங்கள் ஒன்று விடாமல் தேடிப் பார்க்கப்பட வேண்டியவை. இவற்றை அவ்வளவு அருமையாகப் பேணி வைத்திருக்கிறார்கள் அவர்கள்.

லெனின்கிராடில் பார்த்த 'டாஸ்டயேவ்ஸ்கி' மியூஸியம் மறக்க முடியாதது. நாவலாசிரியர் டாஸ்டயேவ்ஸ்கி ஒரு மிலிடரி எஞ்ஜினியராக இருந்தவர். அவருடைய கையெழுத்துப் பிரதிகளிலே எழுத்துக்குப் பக்கத்தில் சில சில கைக்கிறுக்கல் படங்களையும் அவர் போட்டிருக்கிறார். ஓர் என்ஜினியர் என்ற முறையில் அவருடைய கதைகளில் நகரமைப்பு முறைகளை அவர் எப்படி எப்படி வர்ணித்திருக்கிறார் என்ற குறிப்பு, லெனின்கிராட்' நகரில் சுற்றிச் சுற்றி அந்த நகரின் ஒவ்வொரு மூலை முடுக்கும் அவருக்கு எப்படி எப்படிப் பழக்கமாயின என்ற விவரம் எல்லாமே மியூஸியத்தில் வைக்கப்பட்டிருந்தன. **'கிரைம் அண்ட் பனிஷ்மெண்ட்'** — நாவலில் எந்தெந்த இடத்தை அவர் எந்தெந்தச் சூழலில் எப்படித் தூண்டுதல் பெற்று எழுதினார் என்பது போன்ற விளக்கங்கள் வரை படங்கள் எல்லாம் விவரமாகவும் தெளிவாகவும் வைக்கப்பட்டிருந்தன. நான் அறிந்தவரையில் இந்தியாவில் தாகூர் வாழ்ந்த மாளிகையில் கல்கத்தாவில் மட்டுமே இப்படி ஒப்பிடத் தகுந்த லிட்டரரி மியூஸியம் இருக்கிறது. வேறு எங்கும் அநேகமாக இல்லை என்றே கூறி விடலாம்.

ஒருபுறம் விஞ்ஞான வளர்ச்சி, மாபெரும் கனரகத் தொழில் வளர்ச்சி. உண்ண உணவு, உடுக்க உடை, குடியிருக்க வீடு ஆகிய அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்துவிட்ட வெற்றி. மறுபுறம் ஓவியம், சிற்பம், கலைகள், கலைக் கூடங்கள், மியூஸியங்கள் ஆகியவற்றைப் பேணும் மிகுந்த அக்கறை இரண்டும் சோவியத் நாட்டில் அருகருகே தெரிந்தன. உழைப்பு, விஞ்ஞானம், சமத்துவம் என்றே சோவியத் யூனியனைப் பற்றி மிகுதியாகக் கேள்விப்படுவதனால், கலைகள் முதலிய நளினமான அம்சங்கள் பற்றி அவர்கள் அதிகமாகக் கவலைப்பட மாட்டார்களோ என்று எண்ணுபவர்களும் சந்தேகப்படுகிறவர்களும் இருக்கக் கூடும்.

அந்தச் சந்தேகம் அர்த்தமற்றது. விஞ்ஞானத்திலும், தொழில் வளர்ச்சியிலும் அவர்களுக்கு எவ்வளவு அக்கறை இருக்கிறதோ அவ்வளவு அக்கறை கலைகளிலும், ஓவியங்களிலும், இலக்கியங்களிலும் இருக்கிறது. பொது இடங்களில் இருக்கும் சிலைகள், நினைவுச் சின்னங்கள் எல்லாம் கலை அழகுடனும், தொழில் நுணுக்க நயத்துடனும் விளங்குகின்றன.

குறிப்பாக நாடு முழுவதும் சோவியத் யூனியனைப் பெருமைப் படுத்தும் — அந்நாட்டின் பெயருக்குப் புகழ்சேர்க்கிற எழுத்தாளர்களின் சிலைகள் வைக்கப்பட்டிருக்கின்றன. அந்தச் சிலைகள் கம்பீரமாகவும் தத்ரூபமாகவும் இருக்கின்றன. மாஸ்கோவில் உள்ள சோவியத் ரைட்டர்ஸ் யூனியன் தலைமையகத்தில் இருக்கிற டால்ஸ்டாய் சிலையையும், பீக்கிங் ஹோட்டலுக்கு எதிரே மாயக்காவஸ்கி சதுக்கத்திலுள்ள கவிஞர் மாயக்காவஸ்கியின் சிலையையும் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் பார்த்துக் கொண்டே இருக்கலாம். நல்லவர்களை இவ்வளவு போற்றும் அதே சமயத்தில் நாட்டையும், நாட்டின் பெருமையையும் விசுவாசத்தோடு பேணாத வேறு எழுத்தாளர் விஷயத்திலும் சோவியத் சமூக அமைப்புக்கு எதிரான துஷ்பிரசாரத்தை உள்ளே இருந்து கொண்டே செய்ய முற்படுகிற எழுத்தாளர் விஷயத்திலும் நிர்த்தாட்சண்யமாக நடந்து கொள்ளவும் அவர்கள் தயங்க மாட்டார்கள். உதாரணம் சோல்ஷெனிட்ஸன். அவர் நோபெல் பரிசு வாங்குவதை அவர்கள் தடுப்பதாகப் பலர் நினைக்கிறார்கள். அது தவறு. ஷெலகோவ் நோபெல் பரிசு வாங்கியிருக்கிறார். இன்னும் சோவியத் யூனியனில் புகழோடு விளங்குகிறார். நோபெல் பரிசை வாங்கிக் கொண்டு சொந்த நாட்டுக்கும் அதன் திட்டங்களுக்கும் விசுவாசமற்றவர்களாக மாறக் கூடாது என்பதுதான் சோவியத் யூனியனின் கண்டிப்பு. இந்தக் கண்டிப்பில் தவறு இருப்பதாக நான் நினைக்கவில்லை. எந்தப் பெரிய பரிசு கிடைத்தாலும், சொந்த நாடும் சொந்த மக்களும், மிக முக்கியம். சொந்த நாட்டைப் பற்றியும் அதன் பொருளாதாரத் திட்டங்களைப் பற்றியும் குறை சொல்லுகிற மனப்பான்மை வந்தால் அதை யார்தான் பொறுத்துக் கொள்வார்கள்?

(தொடரும்)

வாழ்க்கையில் துரிதமாக வளம் பெறும் ஆடவர் இவர்...

... அதற்குத் துணை செய்ய அழகான ஆடைகளையும் அணிகிறார் !




நிச்சயமாக, மபத்லால் க்ரூப் அளிப்பவை நேர்த்தியான துணிமணிகள்தான் !

-M.461 TM

# குட்மார்னிங் டாக்டர்!

# மருத்துவ உலகில் ஒரு மாற்றம்!

சஞ்சீவி என் அறைக்குள் நுழைந்ததுமே, ''பொறுக்க முடியாத வயிற்று வலி டாக்டர்! நேற்று இரவு முழுதும் துடித்துப் போய்விட்டேன்'' என்று படபடப்புடன் கூறினர்.

'' வயிற்றில் எந்தப் பகுதியில் வலி ?''

'' வலது பக்கத்தில்...கீழ் வயிற்றில் !''

'' வாந்தி எடுத்ததா ?''

'' நேற்று இரண்டு தடவை வாந்தி எடுத்தேன். வாந்தி எடுத்ததும் வலி சற்றுக் குறைந்த மாதிரி இருந்தது.''

'வலி எந்த மாதிரி இருக்கிறது?' என்று கேட்டவாறு அவரைக் கட்டிலில் படுக்கச் சொல்லிப் பரிசோதிக்கத் தொடங்கினேன். வயிற்றின் அடிப் பாகத்தில் வலப்புறமாக விரல்களால் அழுத்தினேன்.



'' அங்கேதான் வலிக்கிறது, டாக்டர்! விண் விண் என்று தெறிக்கிறது. வயிற்றினுள் ஏதோ இறுகக் கவ்விப் பிடித்த மாதிரி வலிக்கிறது. இரண்டு நாட்களாக மலச்சிக்கலும் இருக்கிறது. என் தாயார் பேதிக்குச் சாப்பிடச் சொன்னாள். ஆனால் தகப்பனார் 'டாக்டரைக் கேட்காமல் பேதி மருந்து எதுவும் கொடுக்கக் கூடாது' என்று தடுத்துவிட்டார்.''

''நல்ல வேளை!''

'' எதைச் சொல்கிறீர்கள்?''

''நீங்கள் பேதிக்குச் சாப்பிடாததைத்தான். இந்த நிலையில் உங்கள் தாயார் பேதிக்குக் கொடுத்திருந்தால், உங்கள் உடல் நிலையில் பலவிதக் கோளாறுகள் ஏற்பட்டிருக்கக் கூடும். அதிருக்கட்டும்; நீங்கள் இன்னும் ஒன்று இரண்டு நாட்களுக்குள் 'ஆபரேஷன்' செய்து கொள்ள வேண்டும் !''

''ஆபரேஷனா? எனக்கு என்ன நோய், டாக்டர்? வயிற்றுவலிதானே? மருந்து சாப்பிட்டால் போதாதா ?''

''போதாது. உங்கள் வயிற்று வலிக்குக் காரணம் குடல் அனுபந்தம். Appendicitis என்று ஆங்கிலத்தில் கூறுவார்களே — அதுதான். மருந்து, இஞ்செக்ஷன் மூலம் ஆபரேஷன் செய்து கொள்வதை ஓரிரு வாரங்கள் தள்ளிப் போடலாம். ஆனால் நிரந்தர குணம் வேண்டுமானால், அறுவைச் சிகிச்சையின் மூலமே பெற இயலும்.''

சஞ்சீவி மறு நாளே அறுவைச் சிகிச்சைக்கு உடன்பட்டார். இப்போது நல்ல குணம் அடைந்துவிட்டார்.

**''அப்பெண்டிசைடிஸ் என்றால் என்ன? அதனால் ஏன் வயிற்று வலி ஏற்படுகிறது, டாக்டர் ?''**

''சிறு குடலும் பெருங்குடலும் சந்திக்கும் இடத்தில் 'அப்பெண்டிக்ஸ்' என்ற ஓர் உறுப்பு இருக்கிறது. இது சுமார் இரண்டு அங்குலம் முதல் நாலு அங்குலம் வரை நீளமுள்ளது. சுண்டு விரலைவிட மெல்லியதாக இருக்கும். இது உடலில் ஏன் இருக்கிறது, இது என்ன பணியைச் செய்கிறது, இதனால் என்ன பயன் என்பது யாருக்கும் தெரியாது. மனித உடலைப் பற்றி மருத்துவ உலகம் இது வரை கண்டறியாத மர்மங்களுள் இதுவும் ஒன்று. இதன் திசுக்களில் புண்ணுண்டுவிடுவதால் ரணம் ஏற்பட்டு வலி தோன்றலாம். வயிற்றில் நாக்குப் பூச்சி இருந்து இதன் துவாரத்தை அடைத்துக் கொண்டாலும் ரத்த ஓட்டம் தடைப்பட்டு அப்பெண்சைடிஸ் ஏற்பட வாய்ப்பு உண்டு. ரணம் காரணமாக 'அப்பெண்டிக்' ஸில் வெடிப்பு ஏற்பட்டுச் சீழ், இரத்தம் இவை சுற்றிலுமுள்ள பெரிடோனியம் என்ற பகுதிக்குப் போய்ச் சேரும். அதில் சீழ் அசுத்தங்கள் சேர்ந்தால், பின் விளைவுகள் பயங்கரமானவை. அப்படி ஏதும் ஏற்படுவதற்குள் அறுவை செய்து கொள்வது நலம்.''



**டாக்டர் எம். ஜயராம் கூறக் கேட்டு எழுதியவர்: ஆர். பீ.**

அத்தியாயம் 29

# சிறைக் கைதியும் வீட்டுக் கைதியும்

ரங்கநாதன் வீட்டில் மாசிலாமணி தம்பதிக்கு ராஜோபசாரம் நடந்து கொண்டிருந்த அதே நேரத்தில் பவானியும் கமலாவும் அவர்கள் வழக்கமாகப் பல முறை அமர்ந்து அளவளாவிய அதே மொட்டைப் பாறையில் மறுபடியும் சந்தித்துக் கொண்டார்கள்.

கமலா, இரவு சமையலுக்குத் தீப்பெட்டியும் மலிவாக ஏதாவது காய்கறியும் வாங்கி வர வேண்டியிருப்பதாகத் தம்பி விகலிடம் கூறிவிட்டுப் புறப்பட்டிருந்தாள். ''வீட்டை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். உன் பக்கம் தாளிட்டுக் கொள். ஜன்னல் வழியாக வெளியே பார்த்து இன்னார் என்று தெரிந்து கொண்ட பிறகே கதவைத் திறக்க வேண்டும். சமர்த்தாக இருந்தால் நான் வரும்போது சாக்லேட் வாங்கிக் கொண்டு வருவேன்'' என்றெல்லாம் படித்துப் படித்துப் பலவிதமாகவும் சொல்லிவிட்டுக் கிளம்பியிருந்தாள்.

பவானியோ கோர்ட் முடிந்ததும் காரில் ஏறியவன், வீட்டுக்குப் போகாமல், உமாகாந்தின் நினைவு இதயத்தை முழுமையாக ஆக்கிரமித்துக் கொள்ள ஏலமலைப் பாதையில் அதனை ஓட்டிச் சென்றான். பஸ்ஸில் வந்து சேர்ந்திருந்த கமலா அந்தப் பாறையில் ஏற்கனவே அமர்ந்திருக்கக் கண்டு, ''அடடே! நீ இங்கே எப்போது எதற்காக வந்து சேர்ந்தாய்?'' என்று கேட்டான்.

''வந்து பத்து நிமிஷங்கள் ஆயிற்று. என் தலைவிதியை நினைத்து அழுவதற்குத்தான் வந்தேன்'' என்றாள் கமலா. ''நீங்கள் எதற்கு வந்தீர்கள்?''

''நான் தலைவிதியை நினைத்து அழுபவர்களைத் தேற்றுவதற்கு வந்தேன்!''

''குழந்தையையும் கிள்ளிவிட்டுத் தொட்டிலையும் ஆட்டுவது என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா?''

''நான் அப்படி நடந்து கொள்கிறேன் என்கிறாயா? உன் மனத்தில் யார் இந்த எண்ணங்களை விதைத்தார்கள்? உனக்காக நான் கல்யாணத்தினிடம் எவ்வளவு தூரம் வாதாடியிருக்கிறேன், தெரியுமா?''

''பெரிய வக்கீலாயிற்றே, வாதாடாமல் இருப்பீர்களா? அவரும் ரொம்பப் பெரிய வக்கீல். எனவே, உங்கள் வாதத் திறமையில் சொக்கித்தான் போயிருப்பார்.''

''கமலா! நீ இப்படியெல்லாம் பேசுவதானால் நான் உடனேயே திரும்பிப் போகிறேன்.''

''ரொம்ப சரி, போய் வாருங்கள். நானும் விடைபெற்றுக் கொள்கிறேன்.''

''நீ எங்கே போகப் போகிறாய்?''

''எமலோகப் பட்டணத்துக்கு!''

''இது என்ன உளறல் கமலா?''

''உளறுவது என்ன, வழக்கறிஞர்களின் ஏகபோக உரிமையா? நானும்தான் உளறிவிட்டுப் போகிறேனே?''

''அப்படியானால் ரொம்ப சந்தோஷம். நிறைய உளறு. ஆனால் உளறியபடியே செய்து மட்டும் விடாதே!''

''செய்து பார்த்தால் மட்டும் நினைத்தது நிறைவேறி விடுகிறதா? கிணற்றில் விழுந்து சாக நினைத்தேன், முயன்றும் பார்த்தேன். கல்யாணம் வந்து காப்பாற்றி விட்டார். இங்கே பள்ளத்தாக்கில் விழுந்தாலாவது உயிர் போகுமா என்று பரீட்சித்துப் பார்க்க எண்ணினேன். நீங்கள் தடையாக வந்து சேர்ந்து விட்டீர்கள்.''

''நல்ல வேளையாகப் போயிற்று'' என்றான் பவானி. பிறகு, ''கமலா, இப்படி நீ கோழையாகி விடாமல் வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக்கிக் கொள்ளப் போராட வேண்டும்'' என்றான்.








'' அர்த்தமுள்ளதாக மட்டும் இல்லை அக்கா, லட்சிய வாழ்வாகவே அமையப் போவதாகக்கூட எண்ணினேன். சிறுமியாக இருந்தபோதிலிருந்தே எது எதற்கெல்லாமோ ஆசைப்பட்டேன். எல்லாம் பகற்கனவாக முடிந்து போயிற்று.''

'' அந்தக் கதைகளைத்தான் சொல்லேன், கேட்போம்'' என்றாள் பவானி.

'' அக்கா ! ஒரு நாள் நாங்கள் கடற்கரைக்குப் போயிருந்தோம். காற்று வாங்கத் தான். ஆனால் அங்கே நாங்கள் எதிர்பாராத வாறு காங்கிரஸ் பொதுக்கூட்டம் ஒன்று நடந்து கொண்டிருந்தது. ஒரு பிரசங்கி — அவர் பெயர்கூட இந்தப் படிப்பறிவற்ற மூடத்துக்கு நினைவில்லை — சுதந்திரம் சீக்கிரமே வரும் என்றும் அதற்கு முன்பாகவே அதனை வரவேற்க நம்மை நாமே தயார்ப் படுத்திக் கொள்ள வேண்டும் என்றும் சொன்னார். சமூக மாறுதல்கள் பல ஏற்பட வேண்டும் என்றார். பெண்களுக்குச் சம உரிமைகள் தரப் பட வேண்டும், தீண்டாமை ஒழியவேண்டும், ஜாதி வித்தியாசங்கள் போக வேண்டும், விதவா விவாகங்கள் நடக்க வேண்டும் என்றெல்லாம் அடுக்கிக் கொண்டே போனார். அவற்றுள், 'பெண்கள் ஆண்களுக்குச் சமமாக மட்டுமின்றி அவர்களைவிடச் சிறந்தவர்களாகவே பல துறைகளில் பிரகாசிக்க வேண்டும்' என்று அவர் கூறியது என் மனத்தில் ஆழப் பதிந்து விட்டது. சரோஜினி தேவி, விஜயலக்ஷ்மி பண்டிட், அன்னி பெசண்ட், ராஜகுமாரி அமிர்தகௌர் என்று அவர் பல பெயர்களை அடுக்கினார். அந்த நிமிஷத்தில் நான் பெரிய படிப்புப் படித்து விஞ்ஞானியாகவோ, டாக்டராகவோ நாடு போற்றும் நிலையில் உயரப் போவதாகக் கற்பனை செய்து கொண்டேன். அதெல்லாம் வெறும் கற்பனையாகி விட்டது. எனக்குப் படிப்பு வரவில்லை என்பதால் எட்டாவதுடன் நிறுத்திவிட்டதாக அம்மா சொல்வாள். அது உண்மையில்லை, அக்கா. நான் எல்லாவற்றிலுமே நூற்றுக்கு நூறு வாங்கி விடவில்லை. ஆனால் நான் மக்காகவும் இருந்ததில்லை. 'வயதுக்கு வந்த பெண்ணைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்புவதாவது' என்று சொல்லி அம்மா தடை விதித்துவிட்டாள். 'பெண்ணுக்கு எதற்குப் படிப்பு? குடும்பப் பாங்காக இருக்கத்தான் கற்றுக் கொள்ள வேண்டும், அதுதான் முக்கியம்' என்றெல்லாம் சந்தர்ப்பத்துக்கு ஏற்ற படி பேசுவாள். அக்கா ! நீங்களே சொல்லுங்கள், நான் உங்களைப் போல் பிரகாசிக்கா விட்டாலும் படித்துப் பட்டம் பெற்றிருந்தால் அவர் என்னை இப்படி அலட்சியப்படுத்துவாரா ?'' கமலா நாத் தழுதழுக்கக் கேட்டாள்.

''இப்போதுகூட கல்யாணம் உன்னை அலட்சியப்படுத்தவில்லையே?'' என்றாள் பவானி. ''நீ கல்லூரியில் படித்திருந்தால் இன்றுள்ளதை விட அதிகமாக உன்னிடம் அவருக்கு மதிப்பு உண்டாகலாம். ஆனால் காதல், கல்யாணம் என்பதெல்லாம் வேறு விஷயம் அல்லவா?''

'' வாஸ்தவம்தான், அக்கா! அவரை அடைய எனக்கு இந்த ஜன்மத்தில் கொடுத்து வைக்கவில்லை. அவ்வளவு தான். என் தலைவிதி வேறுவிதமாக



இருந்திருந்தால் நான் நிர்மூடமாக இருந்த போதிலும் அவர் என்னைக் கல்யாணம் செய்து கொண்டிருப்பார், இல்லையா ?''

'' விதி, உன் விஷயத்தில் என்ன நிர்ணயித்திருக்கிறதோ, யாருக்குத் தெரியும் ? இப்போதுகூட என்ன குடிமுழுகிப் போய்விட்டது ? உன் பெற்றோரிடம் வந்து உன்னை மேலே படிக்க வைக்குமாறு நான் வாதாடுகிறேன். கல்யாணத்திடமும் மறுபடியும் பேசிப் பார்க்கிறேன்.''

'' வீண் வேலை அக்கா. என் பெற்றோர் சம்மதிக்கப் போவதும் இல்லை ; அவர் மனம் மாறப் போவதும் இல்லை. பேசாமல் அவரை மணக்க நீங்கள் சம்மதித்து விடுங்கள். அவர் மகிழ்ச்சியைக் கண்டாவது நான் ஆறுதல் பெறுகிறேன் !''

'' அது சரி, அப்போது என் துயரத்தைக் கண்டு யார் வேதனைப்படுவது?'' என்றாள் பவானி.



கமலா விரக்தியாகச் சிரித்தாள். பிறகு, ''அக்கா ! முதன் முதலாக நான் உங்களை ராமப்பட்டணம் வீதியில் சந்தித்தபோது என்ன நினைத்தேன், தெரியுமா ?'' என்று கேட்டாள்.

'' என்ன எண்ணினாய்? அம்மாமி வயதாகியும் இத்தனை அலங்காரமா என்றுதானே ?'' என்றாள் பவானி புன்னகையுடன்.

''இல்லை, அக்கா. உங்கள் அழகையும் அலங்காரத்தையும் அப்புறம்தான் நான் கவனித்தேன். முதலில் என் நெஞ்சைக் கவர்ந்தது உங்களிடம் விகசித்த அறிவொளிதான். 'என்னுடைய நிறைவேறாத ஆசைகள் அத்தனையையும் நிறைவேற்றிக் கொண்ட பெண்ணொருத்தி இதோ இருக்கிறாள்' என்று என் மனம் உடனே உணர்ந்தது. உங்களிடம் எனக்கு மதிப்பு மிகுந்தது. உயர்ந்த படிப்பு, நல்ல உத்தியோகம், பெரிய பெரிய வக்கீல்களுடன் துணிந்து மோதுகிற வாதத் திறன், அத்துடன் அழகு, யௌவனம், அலங்காரம் இதையெல்லாம் பார்த்தபோது எனக்குப் பொறுமையாகக் கூட இருந்தது!

''ஆனால் அக்கா உங்களிடம் வெட்கத்தை விட்டுச் சொல்வதற்கு என்ன? கல்யாணத்தைச் சந்தித்த விநாடியில், படிக்கவில்லையே, பெரிய உத்தியோகம் பார்க்கவில்லையே என்ற ஏக்கங்கள் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டன. 'படிப்பாவது, பதவியாவது ? யாருக்கு வேண்டும் ? இவருக்குப் பணிவிடை செய்துகொண்டு இவர் காலடியிலேவிழுந்து கிடக்கிற பாக்கியம் கிடைத்தால் போதாதா ?' என்று தோன்றியது. இந்த மாறுதலை என்னாலேயே புரிந்து கொள்ள முடியவில்லை !''

''இதில் ஒன்றும் அதிசயம் இல்லை, கமலா! காதல் இதைவிடப் பெரிய தியாகங்களுக்கெல்லாம் நம்மைத் தயார்ப்படுத்தக் கூடியதுதான்'' என்றாள் பவானி.

''அது எப்படி உங்களுக்குத் தெரியும் ? நீங்களோ கல்யாணத்தை விரும்பவில்லை. அப்படியானால் வேறு யாரைக் காதலித்து அவருக்காக என்ன தியாகத்தைச் செய்தீர்கள்?''

''அதைப் பற்றி நான் பேசுவதற்கில்லை, கமலா. அது இன்னொருவர் ரகசியம்'' என்றாள் பவானி.

'' அப்படியானால், அக்கா ! உங்கள் நிலைமை என்னுடையதைவிட மோசமானதுதான். நானாவது மனம் விட்டுப் பேசி உங்களுடன் எண்ணங்களைப் பகிர்ந்து கொள்கிறேன். உங்களால் அதுவும் முடியவில்லையே?''

''ஆம், உன்னைவிடத் தூரதிர்ஷ்டசாலிகள் உலகில் இருக்க முடியும் என்று தெரிகிறதல்லவா ?



''என்ன கோபு! ஏதாவது கல்யாணத்துக்கு போயிட்டு வர்றியா?''

''எப்படிக் கண்டு பிடிச்சே - கையிலே சாத்துக்குடி கூட இல்லியே!''

''கையிலே இல்லாட்டி என்ன - காலிலே புது செருப்பு இருக்கே!'' — உஷா

---

அப்படியிருக்கும்போது மனம் தளர்ந்துபோய் உயிரை விடுவது பற்றியெல்லாம் யோசிக்கலாமா? வா, போகலாம்'' என்று பவானி எழுந்திருந்தாள். குனிந்து கமலாவுக்குக் கைகொடுத்து அவளையும் நிற்க வைத்தாள்.

**கா**ரில் திரும்பும்போது சற்று நேரத்துக்குப் பிறகு, திடீரென்று நினைத்துக் கொண்டவள் போல் பவானி கேட்டாள்: ''அது சரி, என் துணைகூட இல்லாமல் நீ இங்கே அடிக்கடி வருகிறாயா என்ன? ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்! உனக்குத் தெரியுமோ, என்னமோ, இந்தப் பக்கத்தில் தப்பி ஓடிய கைதி ஒருவன் வளைய வருகிறானாம். சில சி.ஐ.டி.கள் அவனைத் தேடிக் கொண்டிருக்கிறார்களாம். கல்யாணம் அவர்களிடம் அந்தக் கைதியின் புகைப்படம் இருப்பதைக்கூடப் பார்த்திருக்கிறார். அந்தக் கைதியிடம் நீ அகப்பட்டுக் கொண்டால் என்ன ஆவது?....''

''ஆவது என்ன அக்கா? அந்தக் கைதியைப் பார்த்து, 'ஏ, கைதியே! உன்னைப் போல் ஓர் அசடு கிடையாது; சிறையிலிருந்து தப்பி வந்தால் சுதந்திரம் என்று நினைத்தாயா? இப்போது சி. ஐ.டி.க்களுக்குப் பயந்து பதுங்கிப் பதுங்கி வாழ்வதிலே என்ன சுதந்திரம் இருக்கிறது?' என்று கேட்பேன். பிறகு நானும் ஒரு கைதிதான் என்று என்னை அவனுக்கு அறிமுகம் செய்து வைப்பேன். 'நீ ஜெயில் கைதி, நான் வீட்டுக் கைதி. நீ அரசாங்கச் சிறையிலிருந்து தாற்காலிகமாகத் தப்பி இங்கு வந்தாய். நான் வீட்டுச் சிறையிலிருந்து தாற்காலிகமாகத் தப்பி இங்கு வந்திருக்கிறேன்' என்பேன். ஒரு கைதி மற்றொரு கைதியிடம் காண்பிக்க வேண்டிய நியாயமான பரிவையும் அன்பையும் அவனிடம் நான் காட்டுவேன்.''

''அப்படியானால் . போலீஸிடம் அவனைக் காட்டிக் கொடுத்துவிட மாட்டாய்?''

''சேச்சே, ஒரு நாளும் மாட்டேன். அது இனத் துரோகம்!''

''அப்படியானால் ஒன்று செய், கமலா! அந்தக் கைதியைக் காண நேர்ந்தால் அவனுக்கு உதவுவதாகச் சொல்லு. அவன் மறைவிடத்தைக் கேட்டுத் தெரிந்து கொண்டு என்னிடம் வா. இருவருமாக அவனுக்கு நம்மால் இயன்ற உபகாரத்தைச் செய்யலாம்.''

''ஐயையோ! உங்களை வேறு இதில் எதற்கு இழுத்து மாட்டி வைக்க வேண்டும், அக்கா? கைதிக்கு உதவுவது குற்றமாயிற்றே!''

''நான் ஒரு வக்கீல் என்பதை மறந்துவிட்டாயா, கமலா? சட்டபூர்வமாகவேகூட அவனுக்கு நான் உதவ முடியும். ஒருவேளை அவன் நிரபராதியாக இருந்து அவனுக்கு என்னால் விடுதலை பெற்றுத் தரவும் முடிந்தால் நான் எவ்வளவு புகழும் பிராபல்யமும் அடைவேன்! அது என் முன்னேற்றத்துக்கு ரொம்பவும் வசதி செய்யும் இல்லையா?''

''அடடே, ஆமாம்! எனக்கு இது தோன்றவே இல்லையே! எப்பேர்ப்பட்ட அசடு நான்'' என்று தன்னையே நொந்து கொண்டாள் கமலா. உடனேயே, ''ஐயோ! இன்னோர் அசட்டுத்தனமும் பண்ணிவிட்டேனே'' என்று பதறினாள்.

பவானி சிரித்துக் கொண்டே, ''பரவாயில்லை; நிதானமாக ஒவ்வொன்றாக எல்லா அசட்டுத் தனங்களையும் ஞாபகப்படுத்திக் கொண்டு மொத்தமாகச் சொல்லு!'' என்றாள்.

கமலா, விகளிடம் தான் மார்க்கெட்டுக்குப் போவதாகக் கூறி விட்டு வந்ததைச் சொன்னாள். ''வெறும் பையை உதறிக் கொண்டு போனால் என் குட்டு வெளிப்பட்டுவிடும், அக்கா!''

பவானி காரைத் திசை திருப்பினாள். ''மார்க்கெட்டுக்குப் போவோம். காய்கறி வாங்கிக் கொண்டு வா. பிறகு உன்னைத் தெரு முனையில் இறக்கி விட்டுவிட்டு நான் கம்பி நீட்டுகிறேன்'' என்றாள்.

## அத்தியாயம் 30

# துயர அலைகள்!

**க**மலா காய்கறிப் பையுடன் வீட்டின் படியேறியபோது உள்ளே பெற்றோர் ஏதோ விவாதத்தில் ஈடுபட்டிருப்பது கேட்டது. தன் பெயரும் அடிபடவே கமலா சற்றுத் தயங்கினாள். ஒட்டுக் கேட்பது தவறு என்று மனம் இடித்துக் காட்டினாலும் அவளால் ஆவலை அடக்கிக் கொள்ள முடியவில்லை. ஜன்னல் ஓரமாக நின்றாள்.

''அந்த மனுஷன் ரங்கநாதன் பாலைக் கொடுத்துக் கோலையும் காட்டுகிற மாதிரி நடந்து கொண்டார் பார்த்தியா?'' என்றார் மாசிலாமணி. ''பத்தாயிரம் பெறுமானம் உள்ள அட்டிகையை உன் கரத்திலே வைத்து விட்டு, ஐந்து நிமிஷம் ஆவதற்குள் வாடகையும் முன் பணமுமாக முந்நூறு ரூபாய் அனுப்பச் சொன்னாரே. அதற்கு என்ன அர்த்தம் தெரியுமா?''

''தெரியாம என்ன? 'உங்க பெண்ணை எனக்குக் கட்டிக்கொடுத்தால் எப்பேர்ப்பட்ட ஐசுவரியங்கள் காத்திருக்கின்றன என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். கூடவே உங்களுடைய ஏழைமை நிலையையும் புரிந்து கொள்ளுங்கள்' என்று கட்டிக் காட்டினார்..... வாடகை கொடுக்க வக்கில்லாமல்தானே, இருக்கிறோம்?''

'' என்னதான் இருந்தாலும் பதினாறு வயதுப் பெண்ணை அறுபது வயசுக் கிழவனுக்கு எப்படி மணம் செய்து கொடுக்கிறது? ஊரிலே நாலு பேர் என்ன சொல்லுவாங்க?''

''ஊர்க்காரர்களுக்கு என்ன, எதை வேணுமானாலும் பேசுவாங்க. நாம் இப்படிக்

# வேறு எந்த ஆரோக்கிய பானமும் பரிபூரணமானது அல்ல.



சாப்பிட நேரமில்லையா?
உணவுக்குப் பதிலாக
உடனடியாக
உதவுவது காம்ப்ளான்.
ஓய்வின்றி உழைக்கும்
அதிகாரிகள்,
பிரயாணிகள், அலுவலகம்
செல்வோர் ஆகியோருக்கு
ஏற்றது காம்ப்ளான்.



சாதாரண ஆரோக்கிய
நிலையில்
ஆரோக்கியமாகவும்
துடிப்புடனும்
விளங்கவும் நீங்கள் உணராத
போஷாக்குப் பற்றாக்குறையை
நிவர்த்தி செய்யவும் தினசரி
காம்ப்ளான் பருகுங்கள்.

## துடிப்புடனும் சக்தியுடனும் விளங்க உங்களுக்குத் தேவையான இந்த 23 அத்தியாவசிய ஊட்டச் சத்துக்கள் நிறைந்த பரிபூரண பானம்

# காம்ப்ளான்®

## ஒன்றுதான்.

புரதம்
கார்போஹைட்ரேட்
கால்ஷியம்
லிப்பிடுகள்
பாஸ்பரஸ்
சோடியம்
குளோரைடு
(cl வடிவில்)
பொட்டாஷியம்
இரும்பு
சத்து
அயோடின்
வைட்டமின் 'ஏ'
வைட்டமின் பி1
ரிபோஃப்ளேவின்



நிகோடினமைடு
கால்ஷியம்
கோலின்
பென்டோதெனேட்
பைரிடாக்ஸின் (பி6)
வைட்டமின் பி12
ஃபாலிக் அமிலம்
வைட்டமின் ஸி
வைட்டமின் டி
வைட்டமின் ஈ
வைட்டமின் கே
அதோடு, இதர சிறுசிறு
பொருட்கள், உடல்
சரிவர ஆரோக்கியமாக
இயங்க உதவும்.

**பாலையும் விட இன்னும் அதிகமான வைட்டமின்கள், புரதம், கால்ஷியம், இரும்புச் சத்து மற்றும் இதர அத்தியாவசிய ஊட்டச் சத்துக்களை காம்ப்ளான் அளிக்கிறது.**

'பரிபூரண' போஷாக்கிற்கு
டாக்டர்களால் பெரிதும்
சிபாரிசு செய்யப்படுவது

சரியாக
சாப்பிடுவதில்லையா?
காம்ப்ளான் தரும்
23 அத்தியாவசிய
'ஊட்டச் சத்துக்களின்'
'பரிபூரண' போஷாக்கை
வேறு எந்த ஆரோக்கிய
பானமும் தருவதில்லை. எனவே
அவரது போஷாக்கில் எந்த
பற்றாக்குறை இருந்தாலும், அதை
ஈடு செய்து, அவரை
ஆரோக்கியமுடன் விளங்கச்
செய்கிறது காம்ப்ளான்.

நோயால் சக்தி
இழந்துவிட்டீர்களா?
'பரிபூரண' போஷாக்கிற்காக,
டாக்டர்களால் பெரும்பாலும்
சிபாரிசு செய்யப்படும்
காம்ப்ளான் பருகி விரைவில்
இழந்த சக்தியைப் பெறுவீர்.








**காம்ப்ளான்®**
ஒரே பரிபூரண
ஆரோக்கிய பானம்.

உலகெங்கும்
உபயோகிக்கப்
படுவது.
**க்ளாக்ஸோ**
ஆராய்ச்சியில்
உருவானது.

CMGC.17-203 TM

# உப்புப் பொம்மை

உப்புப்பொம்மை ஒன்று கடலின் ஆழத்தைக் கண்டு பிடித்து மற்றவர்களுக்குக் கூற நினைத்தது. கடலில் அது இறங்கியதும் கரைந்து மறைந்து விட்டது.

ராமகிருஷ்ண பரமஹம்ஸர் குட்டிக்கதை. "கோகு"

✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻

கஷ்டப்படுகிறோமே ஊர்க்காரங்க வந்து ஒத்தாசை செய்கிறதுதானே? நான் சொல்கிறேன் கேளுங்க. மூணு வயசிலே கமலாவை எடுத்து வளர்க்க ஆரம்பிச்சோம். பதின்மூன்று வருஷங்களாக அவளுக்காக நாம் படாத கஷ்ட நஷ்டங்களா? இப்போது நமக்குக் கஷ்ட காலம் வந்துவிட்டது. தினம் பொழுது விடிந்தால் இன்றையச் சாப்பாட்டுக்கு என்ன வழி என்று யோசனை. அவ கஷ்டப்படாம நாம் வளர்த்தோம். இப்போ நம் கஷ்டம் அவளால் தீரணும்னு இருந்தால் தீரட்டுமே? ஆறு வீடு, நூறு காணி நிலம், பாங்கில் ரொக்கமாக மூன்று லட்சம்.... ஏங்க பணத்தையெல்லாம் ஒரே பாங்கியிலே போட்டு வைக்கிறீரே? திடீர்னு பாங்கு மூழ்கிப் போயிடுச்சன்னு?"

"சரியாப் போச்சு. நீ இப்போ அந்தக் கவலையிலே இறங்கிட்டியா? முடிச்சுப் போடறதைப் பற்றி முதலில் யோசித்து முடிவு செய்!"

"யோசனை என்ன வந்தது. யோசனை? சரின்னு சொல்ல வேண்டியதுதான். ஆனால் பல்லைக் காட்டிக்கிட்டு ஓடாமல் கொஞ்சம் கிராக்கி செய்து கொள்ளலாம். ரொம்பவும் அலட்சியம் பண்ணினாலும் ஆபத்து. சந்தர்ப்பம் கைநழுவிப் போய்விடும்."

"கமலாவைக் கேட்க வேண்டாமா, ஒரு வார்த்தை?"

"அவளை என்ன கேட்கிறது? பதின்மூன்று வருஷங்களாக அவளைக் கேட்டுக் கொண்டா எல்லாம் செய்தோம்? அப்படிக் கேட்க வேண்டும் என்றால் நான் கேட்டுக் கொள்கிறேன். நீங்க பேசாமல் இருங்க."

இந்தச் சம்பாஷணையை வெளித் திண்ணையில் இருந்தபடி கேட்டுக் கொண்டிருந்த கமலாவுக்குத் தரையிலிருந்து பூமி நழுவிச் செல்வது போல் இருந்தது. துயரக் கடலின் ஆழம் காண முடியாத அடிவாரத்தை நோக்கி அவள் மூழ்கிச் சென்று கொண்டிருந்தாள்.

நன்றாகப் படித்துப் பெயர் பெற்ற விஞ்ஞானியாகவோ டாக்டராகவோ விளங்க வேண்டும் என்ற அவள் லட்சியக் கோட்டை அவள் எதிரேயே இடிந்து தகர்ந்து மண் மேடாகியது.

'படிப்பும் வேண்டாம், பதவியும் வேண்டாம். பணம், புகழ் எதுவும் வேண்டாம். கல்யாணத்தின் காலடியில் இருந்து அவனுக்குப் பணிவிடைகள் செய்யும் பாக்கியம் கிட்டினால் போதும்' என்ற அவளுடைய அளப்பரிய ஆசையில் கூடை. கூடையாக மண் விழுந்தது!

அம்மா தன்னிடம் சற்றுக் கடுமையாக நடந்து கொள்வதற்கு அவள் சுபாவம்தான் காரணம் என்று தான் இதுவரையில் நம்பி வந்தது அசட்டுத்தனம் என்பது புரிந்து போயிற்று. அவள் தன் அம்மாவே அல்ல; மாசிலாமணி தன் அப்பாவே அல்ல! தான் ஓர் அனாதை; கல்யாணம் ஏதோ நாடகம் நடத்துகிறாரே, பர்மா அகதிகளுக்கு நிதி திரட்ட என்று. அந்த அகதிகளைவிடக் கேவலமான ஜன்மா தன்னுடையது! 'நான் யாருக்குப் பிறந்தவளோ, எப்படிப் பிறந்தவளோ? குழந்தைப் பிராயத்தில் காணாமல் போனவளோ, அல்லது அவமானச் சின்னமே தானோ? இப்படிப்பட்ட நான், கல்யாணத்தின் கரம் பற்றுவது பற்றி நினைத்துக்கூடப் பார்த்திருக்கலாமா?

'என்னை வளர்க்கும் பணியில் கடந்த பதின்மூன்று வருஷங்களாக அடைந்து வந்த கஷ்ட நஷ்டங்களுக்குப் பிரதியாக இன்று என்னை அப்பாவும் அம்மாவும் விற்கத் தீர்மானித்து விட்டார்கள். ஆட்டைக் கொழுக்க வைத்துக் கசாப்புக் கடைக்காரனிடம் தள்ளுவதுபோல் என்னையும் ஒப்படைக்கத் தீர்மானித்துவிட்டார்கள். அவர்களை நொந்து கொண்டு என்ன பயன்? என் திருமணத்தை ஒரு வியாபாரமாகக் கருதாமல் இருக்க அம்மா என்ன, என்னைப் பத்து மாதம் சுமந்து பெற்றவளா? இல்லையே?"

மாலை மாலையாகக் கண்ணீர் பெருக்கிப் பிரமை பிடித்தாற் போல் நின்று கொண்டிருந்த கமலாவை விசுவின் குரல் உலுக்கி எழுப்பியது.

"அக்கா, அக்கா! உனக்கு ஒரு பரிசு கொண்டு வந்திருக்கிறேன். கல்யாணம் மாமா கொடுத்து அனுப்பினார்!"

"என்னடா பரிசு?" கேவலுக்கிடையே வெளிப்பட்டன வார்த்தைகள்.

"முதல் நாள் அன்றே நாடகம் பார்க்க நாலு டிக்கெட்! இதோ பார்த்தியா? கலையாழியின் கனவு — அட்மிட் ஒன்! இது டிராமா நோட்டீஸ்!"

கமலா பார்த்தாள். விளம்பரத் தாளில் கல்யாணத்தின் படம், புன்னகை தவழும் சுந்தரமான முகம். அதன் அருகேயே கதாநாயகியாக நடிக்கும் பவானியின் சிரிப்புக் குமிழியிடும் அழகிய வதனம்!

அவள் மனக் கண்ணுக்கு மற்றொரு படம் தென்பட்டது. அது ஒரு திருமணத்தின் போது எடுத்த புகைப்படம்.

மணமகள் கமலா. மணமகன் அறுபத்திரண்டே வயதான இருவாளர் ரங்கநாதன்!

கமலாவுக்கு ஆத்திரம் பொங்கி வந்தது. நாடக டிக்கெட்டுக்களையும் நோட்டீஸையும் விசுவின் கரத்திலிருந்து சரேலென்று பிடுங்கிச் சுக்குநூறாகக் கிழித்துத் தெருவில் பறக்க விட்டாள். அடுத்த கணம் தன் சக்தியெல்லாம் இழந்தவளாகத் திண்ணையிலேயே சரிந்து விழுந்து விசும்பி விசும்பி அழ ஆரம்பித்தாள்.

அவள் அழுகைக்கும் மேலாக நாடகத்துக்குப் போகும் வாய்ப்பை இழந்த விசு, 'ஸைரன்' அலறுவது போல் ஊளையிட ஆரம்பித்தான்.

(தொடரும்)

# வசந்த மலர் மேனி
# கோகுல் 'ஸாண்டல்வுட்'



கோகுல் மங்கை,
மணம் கவர் நங்கை.
அவள்
தனிக் கவர்ச்சியை
நீங்களும் பெற
கோகுல் ஸாண்டல்வுட்
டாய்லெட் பவுடரை
உபயோகியுங்கள்
தூய சந்தனம்,
வெளி நாட்டு வாசனைத்
திரவியங்கள், பலவித
இயற்கை மூலிகைகள் கலந்த
பிரத்யேக 'மைக்ரோ-பைன்'
முறையில் தயாரிக்கப்படுவது
கோகுல் ஸாண்டல்வுட்
டாய்லெட் பவுடர்.

**கோகுல்**
**ஸாண்டல்வுட்**
**டாய்லெட் பவுடர்**




டி.எஸ்.ஆர் & கம்பெனி,
மதராஸ்
பிரத்யேக தயாரிப்பு

டி.எஸ்.ஆர் & கம்பெனி, மதராஸ்
ராமாபுரம், மதராஸ்-600 089.

ADWAVE/TSR/449A

## விஞ்ஞானக் கதை

உலகத்திலும், சந்திரனிலும், செவ்வாய்க் கிரகத்திலும் ஏறக்குறைய ஒரே சமயத்தில் பிரசுரமாகும் ''ககன தூதன்'' என்கிற செய்திப் பத்திரிகையின் ஆசிரியர் ஆத்மாவைப் பார்த்தால் அவ்வளவு பெரிய ஸ்தாபனத்தின் தலைவர் இவரா என்று ஆச்சரியம் ஏற்படும். உயரம் சராசரிக்குக் குறைவான ஆறடி இரண்டங்குலம். கண்களில் மெலிதான நீலம். தலையில் சாஸ்திரத்துக்குக் கொஞ்சம் மயிர். பேசும்பொழுது கழுத்தில் கோலிக்குண்டு ஓடும். நல்ல கணீரென்ற குரல்தான். ஆனால் அந்தக் குரலின் கணீரைத் தெரிந்துகொள்ள அதிக நேரம் காத்திருக்க வேண்டும். அதிகம் பேசமாட்டார்.

''ககன தூதன்'' என்கிற மகத்தான ஸ்தாபனம் ஆரம்ப காலங்களில் ஒரே ஒரு வாடகை மினி கம்ப்யூட்டருடன் காந்தி கட்டிடத்தின் ஒரு சிறு அறையில் தொடங்கியபோதே சேர்ந்த ஆத்மா இடைப்பட்ட முப்பது வருடங்களில் 'தூதன்' ராட்சதத்தனமாக விரிந்து பல உலக அமைப்பாக உயர்ந்தபோது அதன் தலைமை ஆசிரியராக உயர்ந்திருக்கிறார்.

''தூதன்'' ஒரு வித்தியாசமான செய்திப் பத்திரிகை. சரியாகச் சொன்னால் அது பத்திரிகையே இல்லை. வீட்டுக்கு வீடு என்று கோடிக்கணக்கான வீடுகளில் அமைக்கப்பட்ட சாதனங்கள் வீட்டுக்குள்ளேயே கடகடப் பட்டனின் தட்டலில் பத்திரிகை அடித்துக் கொடுத்துவிடும். படித்துவிட்டு மற்றொரு பட்டனை மிதித்தால் 'காகிதம்' அழிந்து போய் அடுத்த பதிப்புக்குத் தயாராகி உள்ளே போய்விடும். குப்பை இல்லை, கூளம் இல்லை. காகிதம் எலெக்ட்ரோ காகிதம். சேதமடைய வேண்டியதில்லை. மேலும் எல்லோருக்கும் எல்லாச் செய்தியும் தேவை இல்லை. எனவே, தலைப்புக்களை மட்டும் முதலில் காட்டும். அதை மேய்ந்துவிட்டுத் தேவைப்பட்ட செய்தியை மட்டும் விவரமாகப் படித்துக்கொள்ளலாம். உங்களுக்கு விளையாட்டில் தனிப்பட்ட ஆர்வமா? விளையாட்டுப் பிரதியை மட்டும் வரவழைத்துக் கொள்ளலாம். பூமிக்கும் செவ்வாய்க் கிரகத்துக்கும் நடக்கும் கால் பந்தாட்டத்தைப் பற்றி க்ராஸ்மன் போன்ற நிபுணர்களின் கட்டுரையுடன் அடித்துக் கொடுக்கும்.....

நாம் சொல்ல வந்தது கால் பந்தைப் பற்றி இல்லை. ஆத்மாவின் அந்த விநோத தினத்தைப் பற்றி.

விநோத தினம்தான்.

தூங்கி எழுந்ததும் ஆத்மாவுக்கு முதல் காரியமாகக் ககன தூதனின் அதிகாலைப் பதிப்பை ஒரு தடவை பார்த்துவிட வேண்டும். தாம் இல்லாதபோது இந்தப் பயல்கள் ஏதாவது தப்பாகத் தாறுமாறாக அடித்துவிடப் போகிறார்களே என்ற பயம். வருஷக் கணக்கில் ஸ்தாபனத்தில் ஊறியதால் தாம் இல்லாவிட்டால் பத்திரிகை படுத்துவிடும் என்கிற கவலை ஆத்மாவுக்கு உண்டு.

எனவே தம் படுக்கை அறையில் இருந்த பத்திரிகைப் பெட்டியை இணைத்து ஆறு மணிப் பதிப்பின் எல்லாத் தலையங்கங்களையும் கேட்டார். பழைய டெலிவிஷன் போல இருந்தது அந்தப் பெட்டி. அருகே மூன்றடிக்கு நான்கடியான சதுரப் பரப்பில் குட்டி குட்டியான விளக்குகள் ஆயத்தமாகப் பளிச்சிட்டன. உள்ளுக்குள்ளே ஒரு 'விர்ர்ர்' கேட்டது. உடனே அதன் கீழ்ப் பகுதியிலிருந்து மடிந்து மடிந்து தொடர்ந்த அச்சடித்த காகிதமாக விழ



அதைப் படுக்கையிலிருந்தே எடுத்துத் தலைப்புக்களை ஆராய்ந்தார்.

என்றும்போல ஒரு தினம். சந்திர நகரில் புதிய இருப்புப் பாதைகள்... செவ்வாயில் புதிய ஜலதாரைகள்... குறைந்த விலையில் அணுசக்திக் கைக்கடிகாரங்கள் (முந்நூறு வருஷ உத்தரவாதம்) சுக்கிரனில் முதல் மனித அமைப்புக்குத் தலைவர் விஜயம் செய்வார்.... ரேமனிஸ் என்று பெயரிடுவார்.

தலைப்புக்களை மேம்போக்காகப் பார்த்து விட்டு அழிக்க இருந்த ஆத்மா நின்றுவிட்டார். காரணம் 'பிரபல பத்திரிகாசிரியர் மரணம்' என்ற தலைப்பு. ஆத்மா திடுக்கிட்டார். யார்? நம் போட்டிக்காரன்'விண்வெளிப் பறவை'யின் ஆசிரியன் ஆனந்தனா? ஆத்மாவுக்குக் கொஞ்சம் சந்தோஷமாக (அதே சமயம் குற்ற உணர்ச்சியும்) இருந்தது.

தலைப்பு மட்டும்தான் இருந்ததால் உடனே அந்தத் தலைப்பின் எண்ணை அழைத்து மேல் விவரம் கேட்டார். 'பிரபல பத்திரிகாசிரியர் மரணம்' மறுபடியும் தலைப்பு... அதிவேகமாக கறுப்புக் கட்டம் ஒன்று வரையப்பட்டது. எலெக்ட்ரான் கதிரின் வருடலில் கொஞ்சம் கொஞ்சமாக இறந்தவரின் படம் உருவாகியது. அம்புக் குறிபோட்டு இதுதான் இறந்தவரின் படம் என்று காட்டி விட்டு....




அந்தப் படம் ஆத்மாவின் படம்!

ஆத்மாவுக்கு முதலில் ஏற்பட்ட உணர்ச்சி அதிர்ச்சியா, கோபமா என்று சொல்ல முடியவில்லை. எந்த முட்டாள் இயந்திரம் அந்த மாதிரி தப்புத் தப்பாக அடிக்கிறது என்று நினைப்பதற்குள்ளாகவே முழுச் செய்தியையும் அது ஜோடித்து விட்டது. துடிப்புடன் ஆத்மா அதைப் படித்தார்.

நோவா, ஜூன் 21—

பிரபல பத்திரிகாசிரியரும் எங்கள் ''ககன தூதனின்'' தலைமை ஆசிரியருமான த. ஆத்மா 68 நேற்று மாலை இறந்து போனார். பத்திரிகை அலுவலகத்தில் நேற்றுக் காலை அவர் இதயம் நின்று விட்டது. உடனே டானு ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்பட்டு அவருக்கு மாற்று இதயம் அளிக்கப்பட்டது.. டாக்டர் ராமர் மாற்று இதயச் சிகிச்சை செய்தார். புதிய இதயம் அவர் உடலில் சில மணி நேரங்களே செயல்பட்டது. அதன் பின் நிராகரிக்கப்பட்டு நின்று விட்டது. ஆத்மா இறந்து போனார். டாக்டர் ராமரைப் பேட்டி கண்டபோது பத்தாயிரத்தில் ஒரு தடவை இந்த மாற்று இதயச் சிகிச்சை தவறிவிடுகிறது என்றும், நவீன மருத்துவத்தின் அத்தனை சாகசங்களைச் செய்தும் ஆத்மாவை உயிர் திரும்ப முடியவில்லை என்றும் சொன்னார்.

ஆத்மா'' ககன தூத''னில் ஆரம்ப காலத்திலிருந்தே செயல் புரிந்திருக்கிறார். 2128ம் ஆண்டு மே மாதம் 3ம் தேதி பிறந்த ஆத்மா நோவாவுக்கு அடுத்த...*

ஆத்மா பெட்டியை அணைத்தார். முதலில் இதை ஒரு ஹாஸ்யம் என்றே கொள்ளலாமா என யோசித்தார். இல்லை. கம்ப்யூட்டர் அடிக்கும் செய்தி இது. ஹாஸ்யத்துக்குச் செய்தியில் இடம் கிடையாது. முதலில் அலுவலகத்துடன் பேச வேண்டும். எந்தத் திருடன் செய்த வேலை இது என்று கண்டுபிடித்து .... சுவரில் பதித்திருந்த பிக்சர் போனில் அலுவலகத்தின் பதினாறு எண்களையும் தொட்டார்.

''வணக்கம். ''ககன தூதன்'' அலுவலகம்...'' என்று அந்தப் பெண்மணி சிரித்தாள். நிஜப்பெண் இல்லை. கம்ப்யூட்டர் கிராஃபிக்.

''சிவாவைக் கூப்பிடு, உடனே!''

''மன்னிக்கவும். சிவா அவர்களுடன் நீங்கள் பேச முடியாது. இன்னும் மூன்று மணி நேரம் அவரைத் தொந்தரவு செய்ய முடியாது.''

''சிவா எங்கே?''

''மற்றவர்களுடன் அலுவலகத்தின் அவசர அறையில் கூடிப் பேசிக்கொண்டிருக்கிறார், எங்கள் தலைமை ஆசிரியர் இறந்துவிட்டதால்.''

''பேசுவது உங்கள் தலைமை ஆசிரியரடி ராட்சசி!''

''எங்கள் தலைமை ஆசிரியர் இறந்துவிட்டார்... இறந்து விட்டார்!... மன்னிக்கவும். இப்போது யாருடனும் பேச முடியாது... எங்கள்....''

''மெஷின் முண்டமே! யாராவது மனிதர்கள் இருந்தால் கூப்பிடு!''

''இப்பொழுது யாரையும் கூப்பிட முடியாது. தயவு செய்து உங்கள் பாஷையைக் கட்டுப்படுத்திக் கொள்ளுங்கள்.''

''நாசமாய்ப் போ!'' என்று உதறி எழுந்தார். ''என்னைத்தான் குற்றம் சொல்ல வேண்டும். இந்த மாதிரி 'போன்' வேலைகளுக்கெல்லாம் மெஷின் அமைத்தேன் பார்! என்ன சொல்வது! என்ன அநியாயம் இது! சிவா உடனே கூட்டம் கூட்டி விட்டானே! என் பதவிக்கு ஆசைப்பட்டு... சேசே! நல்ல பையனாச்சே அவன்... அவர்கள் நான் சொல்லிக்கொடுத்தபடிதான் செயல் படுகிறார்கள். நான்தானே அந்த விதியை அமைத்திருக்கிறேன். ''எனக்கு ஏதேனும் நிகழ்ந்து விட்டால் பத்திரிகை நிற்கக் கூடாது. உடனே அவசரக் கூட்டம் போட்டு அவரவர்கள் அலுவல்களைப் புதிதாகப் பிரித்து எடுத்துக் கொண்டு....''

செய்தி வந்ததும் அதைச் சரிபார்க்க மாட்டார்களா முட்டாள்கள்! எதற்குச் சரி பார்க்க வேண்டும்? ''ககன தூத''வின் சரித்திரத்திலேயே தப்பான செய்தி வந்ததில்லையே! இருந்தாலும்... இருந்தாலும்...நான் உடனே அங்கே போக வேண்டும்! என்னைப் பார்த்ததும்தான் இனி நம்புவார்கள்! ஆம்! மத்ய கம்ப்யூட்டர் தப்புச் செய்திருக்கிறது. இதுவரை செய்யாத தப்பு... உடனே செல்ல வேண்டும். செய்திக்கு மறுப்புத் தயாரித்து ஃப்ளாஷ் அடிக்க வேண்டும். இல்லாவிடில் விபரீதமாகிவிடும்.

ஆத்மா தம் கட்டிடத்தை விட்டு வெளி வந்தபோது எப்போதும் காத்திருக்கும் பத்திரிகை ஆபீஸின் வண்டி அங்கே இல்லை. அதுதான் இறந்து விட்டாரே என்று அனுப்பி இருக்க மாட்டார்கள். படுபாவிகளா! வந்து பார்க்க மாட்டீர்களா?... ம்ஹூம்! முதல் காரியமாகக் கூடிப் பேசிவிட்டுத்தான் மேற்கொண்டு துக்கங்கள், துயரங்கள், கூட்டங்கள்!...

மறுபடியும் தம் அறைக்கு வந்து வான டாக்ஸிக்குப் போன் செய்தார். ஒரு நிமிஷத்தில் டாக்ஸி மேல் மாடிக்கு வந்து இறங்கியது.

ககன தூதன் கட்டிடத்துக்குப் போகச் சொன்னார். டாக்ஸிக்காரன் வளவளவென்று பேசினான். ராக்கெட் பயிற்சிக்கு மனுப் போட்டிருக்கிறானாம். கிடைத்தால் இந்தத் தொழிலை விட்டுவிடுவானாம். ''ககன தூதன் என்றா சொன்னீர்கள்? ஆத்மா இறந்து விட்டாராமே! பெரிய ஆசிரியர் அவர். அவருடைய கட்டுரைகளையெல்லாம் விடாமல் மறு பிரதி கேட்டு வைத்திருக்கிறேன்.''

ஆத்மாவுக்கு எரிச்சலாக வந்தது. ''அவர் சாகவில்லை. உயிரோடுதான் இருக்கிறார்'' என்றார்.

''நீங்கள் பத்திரிகை படிக்கவில்லையா?''

''அதில் வந்தது பொய்!''

டாக்ஸிக்காரன் திரும்பிப் பார்த்துச் சிரித்தான்.

''ககன தூதனில் பொய் வராது! எந்தக் காலத்து ஆசாமி நீங்கள்?''

''என் அருமை நண்பனே! அது பொய். எனக்கு நன்றாகத் தெரியும். ஏனென்றால் நான்தான் அந்த ஆத்மா!''

டாக்ஸிக்காரன் முகம் மாறித் திரும்பிக் கொண்டு ''நீங்கள் போக வேண்டியது ஆஸ்பத்திரிக்கு!'' என்றான். அவனை அடித்து விடலாம். அடித்தால் விபத்தாகி விடும். ஆத்மா தம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டார். ககன தூதனின் மேல் மாடியில் அவரை விட்டு விட்டு அவசரமாகப் பணம் வாங்கிக்கொண்டு எவ்விப் பறந்தான் டாக்ஸி.

இருநூற்று எண்பது மாடிக் கட்டிடத்தில் மொட்டை மாடி. கீழே இறங்கும் லிஃப்ட் வாசல் மட்டும் மொட்டென்று நின்றுகொண்டிருந்தது. வாசல் அடைத்திருந்தது. எப்போதும் அடைத்திருக்கும். பிரத்தியேக அடையாளச் சீட்டை அதன் திறப்பில் பொருத்தினால் அதன் காந்த ரேகைகளைப் படித்து அடையாளம் கண்டு கொண்டு கதவு திறந்து கொள்ளும்.

ஆத்மா தம் அடையாளச் சீட்டைச் செருகினார். ஒரு செகண்டு இருபது செகண்டு ஒரு நிமிஷம்... ம்ஹூம். கதவு திறக்கவில்லை! கதவைத் தட்டினால் முட்டாள் தனம். ஒருவரும் கேட்க முடியாது. எனக்கு உரிய அடையாள ரேகை உடனே அழிக்கப்பட்டு விட்டது. நான் உள்ளே போக முடியாது. கத்தினார். ''திருட்டுப் பயல்களா!''

ஆத்மாவுக்கு வியர்த்தது. கையைக் கையால் குத்திக் கொண்டு மேலும் கீழும் மொட்டை மாடியில் உலாத்தினார். சே! எல்லாம் நான் அமைத்த விதிகள்தாம்! 'ககன தூத'வில் பணி புரிபவர் எவர் இறந்தாலும் உடனே அவர்கள் அடையாளப் பிரதி கம்ப்யூட்டரின் ஞாபகத்திலிருந்து நீக்கப்பட்டு விட வேண்டும்.

ஏறக் குறைய மேகம் தொட்டக் கட்டிடத்தின் உச்சியில் தன்னந் தனியாக அதன் ஆசிரியர் நின்றார். தலை சுற்றியது. எட்டிப் பார்க்கப் பயமாக இருந்தது. விர்ர் விர்ர் என்று காற்றடித்தது. மேலே ஏதாவது டாக்ஸி போகிறதா என்று பார்த்தார்.. ம்ஹூம். எல்லோரும் மேகத்துக்கு மேலே தான் பறப்பார்கள். அடையாளச் சீட்டைப் பார்த்தார்.

ஆத்மாவுக்குத் திடீர் என்று ஞாபகம் வந்தது.... நல்ல வேளை! அவசர காலப் பிரவேசம்! ஆம்! லிஃப்ட் கதவின் வாசலில் இருக்கும் வட்டங்களில் குறிப்பிட்ட எண்ணை அமைத்தால் திறக்கலாம்! அந்த எண்ணைத் தம் அடையாளச் சீட்டிலேயே எழுதி வைத்திருக்கிறார்! எப்போதோ தோன்றிய போது....

6262618

கதவு திறந்து கொண்டது. லிஃப்ட் சுவாசித்தது. நாலாவது மாடியில்தான் கூட்டம் நடக்கும் அறை இருக்கிறது. நாலாவது மாடிக்கு இறங்கி வந்தார். நிதானமாக நடந்தார்.

அறையில் இருந்த அந்தப் பெண் திகைத்துப் போனாள்.

''என்னைத் தெரிகிறதா?''

''ஆ....ஆ....ஆத்மா!''

''ஆம். திற கதவை!''

உள்ளே நாற்பதடி நீட்டலான மேஜையின் தலைவனாகச் சிவா உட்கார்ந்திருந்தான். ஆத்மாவின் நாற்காலியில் சிவா. சுற்றிலும் பத்திரிகையின் அத்தனை பேரும் உட்கார்ந்

# ஜான்ஸன்ஸ் வழங்குகிறார்கள் பல-பயனுள்ள cotton bud



## இதோ அதன் உபயோகங்கள்



மேக்-அப்பை சீராக்குகிறது அல்லது விலக்க உதவுகிறது.



நுட்பமான அலங்கார சாதனங்களை சுத்தம் செய்கிறது.



குழந்தையின் மூக்கை சுத்தம் செய்கிறது—நன்கு, மென்மையாக.



சிறிய காயங்களின் மீது மருந்தை ஒற்றி எடுக்க உதவுகிறது.



காதுகளை பத்திரமாக சுத்தம் செய்கிறது-குழந்தையின் காது-களையும் உங்கள் காதுகளையும்.

ஜான்ஸன்ஸ் Cotton Bud-ஐ இன்னும் எத்தனையோ வழிகளில் நாள்தோறும் உபயோகிக்கலாம். உங்கள் வீட்டில் எப்பொழுதும் ஜான்ஸன்ஸ் Cotton Bud இருக்கட்டும்.

**அது சுத்தமானது • பத்திரமானது. சுகாதாரமானது • சௌகரியமானது.**




புதிது! வளையக்கூடிய பிளாஸ்டிக் தண்டு

**பத்திரமாக சுத்தம் செய்வீர்- ஜான்ஸன்ஸ் Cotton Bud—ஆல் சுத்தம் செய்வீர்**

*Trademark © J&J 75

OBM 4617 TM

புதிய

# உடனடி-உபயோக

# டிக்-20



மண்ணெண்ணெ கலப்பதற்கான மேற்படி செலவு கிடையாது!




கலக்க வேண்டிய தொல்லை கிடையாது. திறந்து நேராக உபயோகிக்க வேண்டியதுதான். உடனடியாக மூட்டைப் பூச்சிகளை ஒழிக்கிறது. பிளவுகள், பொந்துகள், மெத்தைத் தையற்குழிகள், ஃபர்னிச்சர் ஜாயிண்ட்டுகள், சுவர்களிலுள்ள சட்டங்களின் அடிபாகங்கள் போன்ற பல இடங்களிலும் புதிய டிக்-20 உபயோகியுங்கள்.

புதிய டிக்-20 இப்போது அதிக பாதுகாப்பானது. வீட்டில் வைக்கலாம். காரணம் அது மீண்டும் புதுப்பிக்கப்பட்ட ஃபார்முலா கொண்டதாகும். முன் கூட்டியே மண்ணெண்ணெ கலக்கப்பட்டு உடனடியாக உபயோகிக்க வசதியாக தயாரிக்கப்பட்டுள்ளது. சர்க்காரின் புதிய நிர்ணயங்கள்படி உள்ளது. உபயோகிப்போரின் பாதுகாப்பை உறுதி செய்கிறது.

## இன்றே டிக்-20 வாங்குங்கள் இன்றிரவே நன்றாக உறங்குங்கள்.

ஒரு ராலிஸ் இந்தியா தயாரிப்பு

RADEUS/R/T-I

இருந்தார்கள். மொத்தம் முப்பத்தாறு மனிதர்கள்!

''டேய், சிவா!''

எல்லோரும் நிமிர்ந்தார்கள்.

சிவாவின் கண்கள் முதலில் அடையாளம் தேடின; கண்டு கொண்டன.

''ஆத்மா! நீங்களா!...''

உடனே முப்பத்தாறு பேர்களும் எழுந்து நின்றார்கள். அவர்கள் முகம் வெளிறிப் போய்விட்டது.

ஆத்மா: ''நான்தான்! நான்தான்! என்னடா பத்திரிகை நடத்துகிறீர்கள்? இதற்குள் எனக்குச் சமாதி கட்டி அடுத்த காரியங்களுக்கு...''

''ஆத்மா! நீங்கள் உயிருடன்... உயிருடன் இருக்கிறீர்களா?''

ஆத்மா அவன் கன்னத்தில் பளீர் என்று அறைந்து, ''உயிர் இருக்கிறதா ?'' என்றார்.

''பின் அந்தச் செய்தி !''

'' நீங்கள் பத்திரிகை நடத்துகிற அழகு ! அது பொய்ச் செய்தி !''

'' இது எப்படிச் சாத்தியம் ஆத்மா !''

'' என்னைப் பார் ! பரதேசிப் பயலே ! என்னைப் பார் ! நான் உயிருடன் இல்லையா ? எப்படிச் சாத்தியம் ?''

''மன்னிக்கவும், ஆத்மா ! நீங்கள் குறிப்பிட்டபடிதான் நாங்கள் செயல்பட்டோம் ! எங்களை நீங்கள் தப்பாக எடுத்துக் கொள்ளக் கூடாது. நீங்கள் திரும்ப வந்தது எங்களுக்குச் சந்தோஷம். பிரச்னை தீர்ந்தது !''

''பிரச்னை தீரவில்லை ! — எப்படி இந்தச் செய்தி பிரசுரமாயிற்று என்று தெரிந்துகொள்ளாதவரை! எங்கே அந்த இன்ஜினீயர், சந்திரா !''

'' உடனே சந்திராவைக் கூப்பிடு !''

''செய்தியை அடித்தது யார் ?''

'' ஜார்ஜ் !''

'' நான் நினைத்தேன். அந்தக் கிழட்டுக் கம்ப்யூட்டரை ஒழித்துக் கட்ட வேண்டும் என்று முன்பே சொன்னேன்......''

''இல்லை, ஆத்மா ! இது வரை ஜார்ஜ் தப்பு எதுவும் செய்ததே இல்லை !''

'' இப்பொழுதாவது தெரிகிறதா? தப்பு செய்திருக்கிறது. அந்த இன்ஜினீயரையும் கூப்பிடு. வா, ஜார்ஜின் அறைக்குப் போகலாம்...! ஜார்ஜுக்கு வயசாகிக் கொண்டிருக்கிறது. ஓய்வு தரவேண்டும் !''

ஜார்ஜ் அந்த அறை முழுவதும் விரவியிருந்தது. அலுவலகத்தின் மத்திய கம்ப்யூட்டர் அது. அசுர வேகத்தில் வரும் அத்தனை செய்திகளையும் வாங்கிக் கொண்டு பாகுபடுத்தி, திருத்தி அமைத்து ஒவ்வொரு சந்தா தாரருக்கும் கேட்ட சமயம் அனுப்பும் இதயக் கம்ப்யூட்டர் ஜார்ஜ். அதனுள் காந்தக் கோப்புகள்... எலெக்ட்ரான் வட்டங்கள்... கண்ணுக்குத் தெரியாத அதிநுட்பமான எலெக்ட்ரானிக்ஸ். கோடானு கோடி ஞாபக செல்கள்..... ஜார்ஜ். ஜார்ஜுடன் டெலிடைப்ரைட்டர் மூலம் விவரமாகப் பேசலாம். அல்லது விசேஷ அமைப்பின் மூலம் மனிதக் குரலிலேயே உரையாடலாம்.

இடம் வலமாகப் பரவியிருந்த ஜார்ஜின் பானல்களின் மத்தியில் நாற்காலி போட்டு உட்கார்ந்து கொண்டு, ''ஜார்ஜ் எப்படி இருக்கிறாய்?'' என்றார்.

'' நலம்தான்'' என்றது ஜார்ஜின் கீழ் ஸ்தாயிக் குரல்.

''நலம் இல்லை. நீ இன்று அனுப்பிய செய்தி ஒன்றில் மகத்தான தப்பு செய்துவிட்டாய்!''

''நான் அனுப்பிய செய்தி எதிலும் தப்பு கிடையாது.''

''பொய் சொல்கிறாய், கிழமே ! உன்னைக் கையும் களவுமாகப் பிடித்திருக்கிறோம். எந்தச் செய்தி என்று சொல்லட்டுமா ?''

''தேவையில்லை. நான் அனுப்பிய எல்லாச் செய்திகளும் உண்மையாக நடந்ததே. தப்பு இருந்தால் வெளி நிருபர்களிடமிருந்து வந்த செய்தியாக இருக்கலாம் !''

''திமிராகப் பேசுகிறது, பார் ! சரி, இன்று நான், அதாவது ஆத்மா இறந்து போனதாகச் செய்தி அனுப்பி இருக்கிறாயே. பிரபல பத்திரிகாசிரியர் மரணம் என்று ஞாபகம் இருக்கிறதா ?''

''இருக்கிறது.''

'' இந்தச் செய்தி எங்கிருந்து கிடைத்தது ? உனக்கு அந்தச் செய்தி தப்பாக இல்லையா ?''

'' அந்தச் செய்தி உண்மையானது ! நடந்தது !''

'' என்னது ! நான் உன் முன்னேயே நிற்கிறேன்..... உன் சென்ஸர்களைத் துடைத்துக் கொண்டு பார் குருட்டு முண்டமே ! பார்த்தாயா ! பார்த்தாயா !''

'' பார்த்தேன்.''

'' என்ன தெரிகிறது !''

''வியக்தி ஆத்மா போல் இருக்கிறார். நான் அனுப்பிய செய்தி நிஜம் !''

''யாரங்கே, இந்தக் கிழட்டுக் கம்ப்யூட்டரை உடைடா !''

''இருங்கள், ஆத்மா !'' என்றான் சிவா. ''ஜார்ஜ், இதோ பார். தெளிவாகச் சிந்தனை செய் ! இது எப்படிச் சாத்தியம்... எப்படி நிச்சயமாகச் சொல்கிறாய், செய்தி நிஜம்தான் என்று !''

''ஆத்மா இறந்ததை நான் பார்த்தேன்!''

ஆத்மாவும் சிவாவும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

''பாயைப் பிராண்டுகிறது. கூப்பிடு, சந்திராவை. எங்கே தொலைந்தான் அந்த இன்ஜினீயர் ?''

உடனே இன்ஜினீயர் சந்திராவைத் தேடிக் கொண்டு இருவர் ஓடினர்.

சந்திரா தம் அறையில் ஸ்டீரியோவிஷனில் ஒரு பெண்ணை உண்டாக்கி அவளை 'வாடி ! வாடி !' என்று கூப்பிட்டுக் கொண்டிருந்தார்.

''உடனே வா சந்திரா! விஷயம் அவசரம் !''

''என்ன! ஆத்மாவுக்குப்பின் அடுத்த ராஜா யார் என்று தீர்மானித்து விட்டார்

---

'ஆர்ட் ப்ளெமிங்' என்ற அமெரிக்க டெலிவிஷன் நடிகர் ஒரு நிகழ்ச்சி நடத்துகிறார். இவரிடம் எந்தப் பதிலைச் சொன்னாலும் அதற்கு ஏற்றக் கேள்வியை 'டக்க்' என்று சொல்லி விடுவாராம்.

பதில்: 5280. இதற்குக் கேள்வி என்ன ?

கேள்வி: ஒரு மைலுக்கு எத்தனை அடி ?

''கோகு''



சிறந்த நாகைச்சுவை நடிகரான ஸர், ஹெர்பர்ட்ட்ரீ, ஒரு சமயம் நாடகக் கொட்டகையில் ஜூலியஸ் ஸீஸர் நாடகத்தை ஒத்திகை பார்த்துக் கொண்டிருந்தார். அப்பொழுது ஒரு சாதாரணப் பாத்திரத்தை ஏற்றிருந்த ஒரு நடிகர் ஒரு வரியை உணர்ச்சியின்றி ஒப்பித்தார். ட்ரீ அந்த நடிகரின் தவறைச் சுட்டிக் காட்டவில்லை. அதற்கும் பதில், அவரை, மேடையில் இன்னும் சற்றுப் பின்னால் நின்றுகொண்டு அந்த வரியைச் சொல்லச்சொன்னார். அந்த நடிகரும் சொன்னார்.



"இன்னும் சற்றுப் பின்னால் நின்றுகொண்டு சொல்லுங்கள்" என்றார் ட்ரீ. நடிகரும் சற்றுப் பின்னால் சென்று சொன்னார்.

"இன்னும் சற்றுப் பின்னால் சென்று சொல்லுங்கள்."

நடிகரும் இன்னும் சற்றுப் பின்னால் சென்று வரியைச் சொன்னார்.

"இன்னும் சற்றுப் பின்னால்" என்றார் ட்ரீ.

"இன்னும் சற்றுப் பின்னால் செல்ல வேண்டுமானால் நான் மேடையை விட்டு வெளியேற வேண்டியதுதான்" என்றார் அந்த நடிகர்.

"அதுதான் என் நோக்கம்" என்றார் ஸர் ஹெர்பர்ட் ட்ரீ.

- நாடோடி

---

களா! எனக்குப் பதவி உயர்வு உண்டா ?'' என்றான்.

''ஆத்மாதான் கூப்பிடுகிறார் !''

''என்னது ! ஏதாவது சாப்பிட்டிருக்கிறாயா ?''

''செய்தி தப்பு ! உடனே வா!''

வாரிச் சுருட்டிக் கொண்டு, ''இரு, போய் விடாதே'' என்று அந்தப் பெண்ணிடம் சொல்லிவிட்டுச் சந்திரா கிளம்பினான்....

''நமஸ்காரம் அண்ணா ! நீங்கள் உயிருடன் இருப்பது எனக்கு எவ்வளவு ஆறுதல் தெரியுமா ? எப்படி அந்தத் தப்பு நிகழ்ந்தது ?''

'' வாய்யா ! முதலில் இந்தக் கிழத்தைக் கவனி !''

'' எந்தக் கிழம் ?''

''அதுதான் ஜார்ஜ் !''

'' ஜார்ஜா ? ஜார்ஜா தப்புச் செய்திருக்கிறது...''

''ஆமாம் !''

''நம்ப முடியவில்லையே !''

''ஏய்! நான் யார் ?''

''சத்தியமாக ஆத்மா தான் !''

''ஜார்ஜைக் கவனி !''

சந்திரா மெதுவாக ஜார்ஜை அணுகினான். '' ஏண்டா, ஜார்ஜ் கண்ணா ! என்ன வந்தது உனக்கு ? ஏன் உளறி இருக்கிறாய்! இந்த மாதிரியெல்லாம் செய்யமாட்டாயே ?''

''நான் அனுப்பிய செய்தி நடந்தது !'' என்றது ஜார்ஜ்.

''இரு. இரு. பார்த்துவிடலாம்.... என்ன தப்பு? எங்கேயாவது வலிக்கிறதா?....எங்கேயாவது முக்கால் ரூபாய் கண்டன்ஸர் வெடித்திருக்கிறதா ?''

'' என்னிடம் ஒரு தப்பும் இல்லை!''

''பார்த்துவிடலாம். அப்படித்தான் சொல்வாய்! ஜார்ஜ் உனக்கு வர வரக் கொஞ்சம் திமிர் அதிகமாகிக் கொண்டிருக்கிறது.... அன்று என்னைச் சதுரங்கத்தில் ஜெயித்தாய்... உனக்கு யார் அந்த புரோக்ராம் சொல்லிக் கொடுத்தார்கள் ?''

''நானே உண்டு பண்ணிக் கொண்டேன்.''

'' இந்தச் செய்தியையும் நீயேதானே உண்டு பண்ணிக் கொண்டாய் !''

''இல்லை, நான் பார்த்தேன் !''

''நீ... பார்த்தாயா?''

''ஆம். நிகழ்ந்தது; நான் பார்த்தேன் !''

''செய்தியை மறுபடியும் காட்டு. பார்க்கலாம் ?'' எதிரே இருந்த மானிட்டரில் செய்தி மறுபடியும் உருவாகியது.

பிரபல பத்திரிகாசிரியர் மரணம். ஆத்மாவின் படம். நோவா ஜூன் 21... பிரபல பத்திரிகாசிரியரும், எங்கள் ககன தூதனின் தலைமை ஆசிரியருமான ஆத்மா 68, நேற்று இறந்து போனார் ! . . . .

''நிறுத்து !'' என்றான் சந்திரா.

செய்தி நின்றது.

''ஆத்மா, கண்டுபிடித்துவிட்டேன் . . . . ! ஆரம்பமே தப்பு! தேதி என்ன போட்டிருக்கிறது, கவனித்தீர்களா! ஜூன் 21 என்று. இன்று என்ன தேதி? ஜூன் 20! ஜார்ஜ், இன்று என்ன தேதி ?''

''ஜூன் 20!''

'' ஜூன் 21 என்று எப்படிப் போடலாம் நீ?''

சற்று நேரம் மௌனம்.... அதன்பின் பதில் வந்தது. ''செய்தி சரியானதே !''

''சே ! என்ன ஜார்ஜ் நீ ! உன்னை நான் கொஞ்சம் தீவிரமாகக் கவனிக்க வேண்டும். செய்திக்குப் பதில் ஜோஸ்யம் சொல்ல ஆரம்பித்துவிட்டாய் ! கிறுக்குப் பிடிக்கப் போகிறது போலிருக்கிறது....''

''செய்தி சரியானதே !''

''வாயை மூடு !''

''இரு சந்திரா!'' என்றார் ஆத்மா. ''இன்னும் கேட்க வேண்டும் இந்தக் கிழத்தை....''

''ஜார்ஜ் ! நீ பார்த்தேன், பார்த்தேன் என்கிறாயே ! என்னதான் பார்த்தாய் ?''

''ஆத்மா இறந்ததை !''

''விவரமாகச் சொல்!'' என்றார்.

''ஆத்மா ககன தூதன் அலுவலகத்தின் மேல் மாடியில் டாக்ஸியில் வந்து இறங்கியதைப் பார்த்தேன். அவசர எண்களை உபயோகப்படுத்தி லிஃப்ட் மூலம் இறங்குவதைப் பார்த்தேன்..... இறங்கி நாலாவது மாடியில் அவசரக் கூட்டத்தில் நுழைந்து சப்தமிட்டு ஆரவாரித்ததைப் பார்த்தேன்..... பின் எல்லோரையும் அழைத்துக் கொண்டு இந்த அறைக்குள் வருவதைப் பார்த்தேன்..... என்னைக் கேள்விகள் கேட்டு, இன்ஜினீயர் சந்திராவைக் கூப்பிட்டு என் மேல் தப்பிருப்பதாகப் பிடிவாதமாகச் சண்டையிட்டு...''

'' சண்டையிட்டு ?''

'' என் மேல் அதிகக் கோபம் அடைந்து அந்தக் கனமான நாற்காலியைத் தூக்கி என் மேல் வேகமாக எறியும்போது, இதய வலி வந்து... இதயம் நின்று போய் அப்படியே மயங்கி விழுவதைப் பார்த்தேன் !...''

ஆவேசம் வந்த ஆத்மா அந்த நாற்காலியை எடுத்து ஜார்ஜின் மேல் எறிய முற்பட்டார் . . . .



கல்கி காரியாலய (*Chief Accountant*) ஸ்ரீ P. ராமகிருஷ்ணன் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி நாராயணனுக்கும், ஸ்ரீ துரைசாமி அய்யர் அவர்கள் குமாரத்தி சௌ. ஜெயலட்சுமிக்கும் சென்னையில் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடை பெற்றது. திருமணத்துக்கு கல்கி அதிபர் சதாசிவம் தம்பதியர்களும், உறவினர் களும், நண்பர்களும் வருகை தந்து மணமக்களை வாழ்த்தினர். வாழ்க மணமக்கள்

---

# புதியது!

# டம்ளர் பேக்

100 கிராம்

நெஸ்க:பே.

100%
அசல் காபிக்
கொட்டையில்
தயாரிக்கப்பட்டது

NESCAFÉ®
instant coffee





உலகிலேயே
மிக அதிகமாக
விற்பனையாகும்
இன்ஸ்டன்ட் காபி

நெஸ்க:பே®

NNCM 44-76 TAM

அத்தியாயம் 18

## கோழியர்கோன் தூது

# சேரமான் காதலி

கண்ணதாசன்

சேரலர் கோன்; கொங்கர் கோன்; கூடலர் கோன்; கொல்லி நகர்க்கு இறை —குலசேகர ஆழ்வாரின் மரணம் அபூர்வமாக அவதரித்திருக்கும் ஒரு மகானின் மரணம்.

அது மரணமல்ல; புகழுடம்பெய்திய புதுப் பிறப்பு.

அவரது இறுதி யாத்திரை அதனைச் சுட்டிக் காட்டிற்று.

மனிதர்கள் எப்படி வாழ்ந்தார்கள் என்பதை அவர்களது மரணமே காட்டுகிறது.

நாதியற்ற மரணம், நாடே இரங்கும் மரணம் என்று மரணத்திலும் இரண்டு வகை உண்டு.

ரத்த பந்தமில்லாதவர்களையே கதறி அழ வைக்கும் அற்புத மரணம் ஒருவருக்கு வாய்க்கிறதென்றால், அவர் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்தவர் என்று பொருள்.

சுடுகாடு வரையிலே தொடர்ந்து வரும் கூட்டம் சடலத்தைச் சுட்ட பின்பும் பல ஆண்டுகள் வரை நினைவிலே வைத்திருக்கிறதென்றால், அந்தச் சடலம் ஆவியோடிருந்தபோது செய்த தவம் அது.

நித்திய கருமங்கள் தவறாமலும், சத்திய கருமங்கள் வழுவாமலும் நடந்து கொண்ட மனிதர்களையே உலகம் அடையாளம் கண்டு கொள்கிறது.

எங்கோ பிறந்து, எங்கோ வளர்ந்து, எங்கோ மறைகின்ற ஒருவரை அங்கே இருக்கின்ற கூட்டமும் அழுது வழியனுப்புகிறதென்றால், தங்கும் இடம் அனைத்தையும் தனது சங்கம் ஆக்கிக் கொண்டவர் அவர் என்று பொருள்.

நந்தா விளக்கனைய நாயகன்—

நாநிலத்தின் தந்தை; தயாநிதி.

சிந்தை அனுவெல்லாம் சிலிர்க்கச் செய்யும் சந்திர சூரிய வடிவம்.

அரசியல் பரிபாலனத்தில் தசரதன்.

ஆன்மிக பரிபாலனத்தில் ஞான முனிவன்.



சோழ நாடே திருக்கண்ணபுரத்தில் திரண்டிருந்தது.

இறுதி அஞ்சலி செலுத்த சோழ நாட்டின் இளவரசன் இரண்டாம் விக்ரம சோழன் தனது பட்டத்து ராணியோடு வந்திருந்தான்.

வயது காரணமாக அவன் இளவரசன். ஆயினும் அப்போது அவனே பட்டத்துக்கு வந்திருந்த அரசன்.

அவனது ராணியின் பெயர் அறியக் கிடைக்காததால் அவளைச் சோழமாதேவி என்றே அழைக்கிறோம்.

விக்ரம சோழனும் சோழமாதேவியும் குலசேகர ஆழ்வாரின் திருப் பாதங்களைத் தொட்டு வணங்கினார்கள்.

இடுவதும் சுடுவதுமாகிய இரண்டு பழக்கங்களும் சங்க காலம் தொட்டே இந்துக்களின் சம்பிரதாயமாக இருந்தமையால், 'இடுவதா, சுடுவதா' என்ற கேள்வி விக்ரம சோழனுக்கும், நாராயண நம்பூதிரிக்கும் ஏற்பட்டது.

இறுதியில் ஒரு முடிவுக்கு வந்து ஆழ்வாரின் திருமேனியை வழியனுப்பி வைத்தார்கள்.

தந்தைக்குச் செய்ய வேண்டிய கடைசிக் கருமங்களைச் செய்யவே கண்ணபுரத்துக் காருத்தன் தன்னை அழைத்து வந்திருக்கிறான் என்று மார்த்தாண்ட வர்மன் கருதினான்.

தனது பாபங்களுக்குப் பரிகாரமாகவே பகவதி அம்மன் கல்யாணியை அனுப்பித் தன்னை அழைத்து வரச் செய்திருக்கிறாள் என்று ரவிவர்மன் கருதினான்.

இளம் வயதிலேயே நம்பூதிரிகள் சபையின் தலைவராகி ஆழ்வாரோடு இணை பிரியாதிருந்த தன்னை இறுதிக் காலத்திலும் கொண்டு வந்து சேர்த்ததற்கு நாராயண நம்பூதிரி நாயகனுக்கு நன்றி செலுத்தினார்.

அன்புக்கு அடிமையாய், நாயினும் நன்றியுடையோனைக் கிடந்த அங்கதன் ஆழ்வாரின் இறுதிக் காலத்தில் கூட இருக்க முடிந்தமைக்கு, ஆண்டவனுக்கு நன்றி செலுத்தினான்.

திருவேங்கடத்தான் ஸ்ரீவல்லபர், மரண காலத்தில் ஆழ்வாரின் திருமுக தரிசனம் தமக்குக் கிடைத்தமைக்கு வேங்கடத்து நாயகனுக்கு நன்றி கூறினர்.

மெல்லிளங்கோதையும், பத்மாவதியும் ஒருவரை யொருவர் அணைத்தபடி 'இனியாவது இறைவன் நம்மைப் பிரிக்காமல் இருக்கட்டும்' என்று வேண்டினார்கள்.

தாவளி சகோதரிகள் இதயம் துடிக்க ''அடுத்து என்ன?'' என்பதிலேயே ஆர்வம் காட்டினார்கள்.

கருமங்கள் முடிந்து விட்டன.

கேள்விக் குறிகள் எங்கே போவது என்று தெரியாமல் திகைத்து நின்றன.

விக்ரம சோழனுக்கு அனைத்தும் தெரியும்.

அவன் வயதில் இளைஞனாயினும் அறிவில் முதியவன். சேர நாட்டோடு பகையில்லாமல் வாழ்ந்தவன்.

அகன்ற மார்பும், திரண்ட தோள்களும், அமைதி பொலியும் திருமுகமும், அடக்கம் உடைய குணமும் மிருந்த விக்ரம சோழன் அனைவரையும் தனது அரண்மனைக்கு அழைத்தான்.

சோழ நாட்டின் தலைநகரில் அவர்களை வரவேற்று, சேரநாட்டின் தலைவிதியை அங்கே நிர்ணயிக்க அவன் விரும்பினான்.



கூட்டம் கலைந்து சென்ற பிற்பாடு ஆழ்வார் தங்கியிருந்த இடத்தில் அவன் அனைவரையும் சந்தித்தான்.

நுண்ணிய அறிவு படைத்த விக்ரம சோழன் முதலில் மார்த்தாண்டவர்மவிடமோ, ரவிவர்மவிடமோ பேசவில்லை.

கேள்விக் குறியை எழுப்பக் கூடியவரும், அதற்கு ஓர் ஆச்சரியக்குறியைக் காணக் கூடியவருமாகிய நாராயண நம்பூதிரியிடமே முதலில் பேசினான்.

''இதில் பேசுவதற்கு என்ன இருக்கிறது? வஞ்சியின் அரசுரிமை மார்த்தாண்ட வர்மனையே சார்ந்தது. அதை ரவி வர்மன் ஒப்புக் கொள்ள வேண்டியதுதான் பாக்கி. ஒப்புக்கொள்ள மறுத்தால் நடப்பது நடக்கட்டும்'' என்று கூறிவிட்டார் நாராயண நம்பூதிரி.

''கேள்வி ஒன்று எழுந்த பிற்பாடு அதற்கு ஒரே பதில்தான் இருக்க முடியும். அந்தப் பதிலைச் சொல்ல வேண்டியவன் ஒருவன்தான் என்றாலும், அவனை அமைதிப்படுத்த வேண்டியதோ, அவனுக்குப் புரிய வைக்க வேண்டியதோ நமது கடமை. எடுத்த எடுப்பில், என்ன சொல்கிறாய் என்று கேட்பது நல்ல பதில் சொல்ல வழி செய்யாது. சீற்றத்தை உண்டாக்கி முடிவைத் தாமதப்படுத்துவதை விட, தேற்றித் தெளிய வைத்து முடிவைக் காண்பது நல்ல பலன் தரும். நாம் உறந்தைக்குச் சென்று அமைதியாக உட்கார்ந்து பேசினால் கேள்விக்கே இடமில்லாத முடிவொன்று கிடைக்கும்''

என்று அவரை அமைதிப்படுத்த முயன்றான் விக்ரம சோழன்.

நாராயண நம்பூதிரி அதை ஒப்புக் கொள்வதாக இல்லை.

அதன் பிறகு அவன் மார்த்தாண்ட வர்மனைச் சந்தித்தான்.

''சரியாகவோ தவறாகவோ வஞ்சியில் பல நிகழ்ச்சிகள் நடந்துவிட்டன. நடந்தவற்றை மறந்தால்தானே நடக்க வேண்டியதை நினைக்க முடியும். வஞ்சம் வளர்ந்து கொண்டே போனால் வஞ்சி அழிந்துபோகும். ஈட்டி முனையால் சாதிக்க முடியாததைக் கூட இதயக் கனிவால்



சாதிக்க முடியும். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று மார்த்தாண்ட வர்மனை அவன் கேட்டான்.

கண்ணை மூடிக் கொண்டு மார்த்தாண்ட வர்மன் சொன்ன ஒரே பதில்: ''தம்பிரான் சுவாமிகள் கருத்து என்னவோ அதுவே என் கருத்தாகும்'' என்பதே!

தன் வாதம், பிடிவாதத்தில் சிக்கிக் கொண்டிருக்கிறது என்பதை உணர்ந்த விக்ரம சோழன் இது காலத்தால் தீர வேண்டிய நோய் என்று கருதினான்.

நாராயண நம்பூதிரி, மார்த்தாண்ட வர்மன், பாஸ்கர ரவிவர்மன், ஸ்ரீவல்லபர், அவர்களது குடும்பத்தினர், அவர்களோடு கல்யாணி — அனைவரையும், ''ஓய்வெடுத்துக் கொண்டு புறப்படலாம்; அனைவரும் உறைந்தைக்கு வாருங்கள்!'' என்று அழைத்தான்.

அதையும் மறுக்கக் கூடிய நாகரிகக் கேடு அங்கே யாருக்கும் இல்லை.

இது உறையூர்.

காஞ்சியிலே ஒரு காலும், வடக்கே உஜ்ஜைனியில் ஒரு காலும், தெற்கே ஈழத்தில் ஒரு காலும் வைத்து, நாலாவது காலை உறையூரில் வைக்கும், 'கோழியர் கோன்' என்ற விக்ரம சோழனின் பட்டத்து யானையும், படை வீரர்களும் எல்லையிலே அவர்களை வரவேற்றார்கள்.

கரை ஏறி மீன் விளையாடும் காவிரிக் கரைக்கு அவர்கள் வந்து சேர்ந்த போது ஒவ்வொருவர் இதயத்திலும் ஒவ்வொரு மாறுதல் இருந்தது. ஆனால் நாராயண நம்பூதிரி மட்டும் பரசுராமனின் அவதாரமாகவே காட்சியளித்தார்.

ஆடியில் பெருகும் காவிரி நீர் போல் அவர் உள்ளத்தில் ஆத்திரம் பெருகிக் கிடந்தது.

உறையூரின் வனப்பில் அவர் மயங்கி விடவில்லை.

கருநாடக மாதர் தெருவும், சளுக்கிய மாதர் தெருவும், சிங்களத்து மங்கையர் தெருவும், பல்வகை வணிகர் தெருவும், யவனர் இருக்கையும் கொண்ட அழகிய உறையூர் இளகிய மனத்தோடு அவர்களை வரவேற்றது.

பனஞ்சாறு பிழிந்து களிமண்ணால் கட்டப்பெற்று முட்டைக் கருவினால் மெருகு போடப்பட்ட விக்ரம சோழன் அரண்மனை காவிரியின் அருகிலேயே இருந்தது.

அதிலே அந்தப்புரம் தனியாகவும், மந்திராலோசனை மண்டபம் தனியாகவும், விருந்து மண்டபம் தனியாகவும், நெற்களஞ்சியம் தனியாகவும் பகுதி பகுதியாக இருந்தன.

அனைவரும் அங்கு வந்து சேர்ந்த போது அந்தி சாயத் தொடங்கிற்று.

அரண்மனைச் சுவர்களில் தீவட்டிகள் எரியத் தொடங்கின.

அரண்மனையில் காவல் காத்துக் கொண்டிருந்த படை வீரர்களும், அந்தப்புரத்தைக் காத்துக் கொண்டிருந்த அலிகளும் கடமை மாற்றிக் கொண்டிருந்தனர்.

ஆன்பாலும், தேனும், அரம்பை முதல் முக்கனியும் விருந்து மண்டபத்தின் பளிங்கு மேடையில் வரிசையாக வைக்கப்பட்டிருந்தன.

ஐம்பெருங் குழுவினரும் எண்பேராயத்தவரும் மட்டுமே அங்கே அனுமதிக்கப்பட்டிருந்தனர்.

விருந்து முடியும்வரையில் அங்கே அரசியல் வாதங்கள் ஏதுமில்லை.

மாதர்கள் அந்தப்புரத்துக்கும், மற்றையோர் மந்திராலோசனை மண்டபத்துக்கும் திரும்பினர்.

சேர நாட்டின் தலைமுறைக் கேள்வியை அங்கேயே எழுப்ப விக்கிரம சோழன் விரும்பவில்லை.

இத்தகைய சூழ்நிலைகளில் அந்தப்புரத்தின் சக்தி என்ன என்பது அவனுக்குத் தெரியும்.

அவன் தனது அந்தரங்கத் திருவறைக்குச் சென்று, சோழமாதேவியை அழைத்து வரச் செய்தான்.

வேத காலத்துத் திருமகள், மாதர் குலத்து மணிவிளக்கு, மங்கல மடந்தை சோழமாதேவி வடமொழிச் சூத்திரம் உரைத்தபடி கணவனுக்கு யோசனை சொல்வதில் மந்திரியாகவும் விளங்கியவள்.

''தேவி, திருவஞ்சைக் களத்தின் மீது விழுந்துள்ள கேள்வி உனக்குத் தெரியாததல்ல. பட்டத்துக்குரியவர் மார்த்தாண்ட வர்மர்; அதைப் பறித்துக்கொண்டவர் ரவிவர்மர். நேரடியாகப் பார்த்தால் இவருக்கு அவர் கொடுத்துவிடவேண்டியதுதானே என்று தான் உனக்குத் தோன்றும். கெட்டுப் போனாலும் விட்டுக் கொடுக்க மாட்டேன் என்று ஒருவரும், நான் பட்டுப் போனாலும் விட்டுவிட மாட்டேன்என்று ஒருவரும் நின்றால் அங்கே நியாயத்தை நிலைநாட்ட ஒரு சபையே தேவைப்படும். மார்த்தாண்ட வர்மர், ரவி வர்மர் இருவருக்குமிடையே விழுந்துள்ள கேள்விக் குறியைத் தீர்த்து வைக்க நான் ஐம்பெருங் குழுவையும், எண்பேராயத்தையும் மட்டும் நம்பவில்லை. ஒரே முடிவிலே நிற்கிறார் நாராயண நம்பூதிரி. அந்த விஷயத்தில் அவரது பிரதிபிம்பமாக நிற்கிறார் மார்த்தாண்ட வர்மர். இதில் பரிகாரம் என்பது அந்தப்புரத்தின் வழியாகத்தான் வரவேண்டியிருக்கிறது. உனது மொழிதான் மெல்லிளங்கோதைக்குப் புரியும். மெல்லிளங்கோதையின் மொழிதான் மார்த்தாண்ட வர்மருக்குப் புரியும். மார்த்தாண்ட வர்மருக்குப் புரிந்து விட்டால்,



**தவறு! தவறு!! தவறு!!!**

''டாக்டர்கள் தங்கள் தவறுகளைப் புதைக்கிறார்கள். வக்கீல்கள் தங்கள் தவறுகளைத் தூக்கில் போடுகிறார்கள். பத்திரிகையாளர்கள் தங்கள் தவறுகளை முதல் பக்கத்தில் பிரசுரிக்கிறார்கள்'' -இந்திராகாந்தி

- இந்துஸ்தான் டைம்ஸ் - பாபு

# தலைவலி உங்களைத் தாக்கும்போது ஸாரிடான் கொண்டு அதைத் தாக்குங்கள்.

தலைவலி மற்றும் உடம்பு வலியிலிருந்து ஸாரிடான் மட்டுமே வெறும் நிவாரணத்தைக் காட்டிலும் அதிகப்பலன் தருகிறது. அதன் விசேட கலவை முறை வலியைப் போக்கும் போதே களைப்பை நீக்கிப் புத்துயிரளிக்கிறது. இங்குதான் ரோஷின் சர்வதேச ஆராய்ச்சி உங்களுக்காக செயல்படுகிறது






உங்கள் எல்லாத் தலைவலிகளையும் போக்குகிறது ஒரே ஒரு **ஸாரிடான்**

தம்பிரான் சுவாமிகள் தலையிடுவதற்கு நியாயமில்லை. மெல்லிளங் கோதையும் பத்மாவதியும், தாவளி சகோதரிகளும் ஓர் உடன்பாட்டுக்கு வந்து விட்டால் அந்தப்புரத்து உடன்பாடு இந்தப் புறத்துக்கும் வந்துவிடும். நீ மெதுவாக மெல்லிளங் கோதையைத் தயார்செய். சரியோ தவறோ ஆதிக்கம் ரவிவர்மர் கையிலே இருக்கிறது. அவர் அதைச் சாதிக்க முயன்றால் நீடிக்கும் ஒரு போர் நடத்த வேண்டியிருக்கும். அந்தப் போரை நடத்தும் வல்லமை மார்த்தாண்ட வர்மருக்கு இல்லை என்பதை மெல்லிளங்கோதைக்கு நீ தெளிவு படுத்திவிடு'' என்றான் விக்ரம சோழன்.

சோழ மாதேவி அனைத்தையும் உணர்ந்தவளாய் அந்தப்புரத்துக்குச் சென்றாள்.

அவள் மெல்லிளங் கோதையைத் தனியே அழைத்துப் பேசவில்லை. கோதை, பத்மாவதி, தாவளி சகோதரிகள், கல்யாணி அனைவரையும் வைத்துக்கொண்டே பேசினாள்.

''உடன் பிறந்தார் இருவருக்குள் மோதல் வந்து ஒருவர் அதில் தோற்றாலும் தோற்பது அவர்கள் குலமே. இருவரும் வெற்றி பெறுவது இயற்கையில் நடக்கக் கூடியதல்ல. ஆனால் இருவரும் வெற்றி பெறுவதற்கு இதில் வழி இருக்கிறது. யாருக்கு யார் விட்டுக் கொடுப்பது என்பதே கேள்வி. கோதை, எனது நாயகர் செய்து வைக்கும் சமரசத்தை ஒப்புக்கொள்ளும்படி நீ உன் நாயகனை வற்புறுத்த வேண்டும். பத்மாவதி நீயும் அப்படியே!''

கோதை மௌனமாக இருந்தாள்.

பத்மாவதி பயத்தோடு சொன்னாள்:

''நான் சொன்னதை அவர் கேட்டதாக வரலாறே இல்லையே!''

சோழமா தேவி சொன்னாள்:

''வரலாறு அடிக்கடி மாறும். இல்லறத்தில், சூரியன் இருக்கும்போது நடக்கும் வரலாறு சந்திரன் வந்த பிறகு மாறுவதில்லையா? ஒரு பெண்ணின் புத்தி கூர்மை எதையும் மாற்றிவிட முடியும். நீங்கள் தனித்தனியே உங்கள் துணைவரை அழைத்துப் பேசுங்கள். வேறொன்றும் வேண்டாம். எனது நாயகர் சொல்வதையும் நடுவர்களாக நிற்கும் பதின்மூவர் – அதாவது ஐம்பெரும் குழுவினரும், எண்பேராயத்தவரும் சொல்வதையும் ஒப்புக்கொள்ளும்படி அவர்களை வற்புறுத்துங்கள். தாங்கள் சொல்வதை ஒப்புக்கொள்ளும்படி தம்பிரான் சுவாமிகளை அவர்கள் வற்புறுத்தட்டும்.''

–மெல்லிளங் கோதையும் பத்மாவதியும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டார்கள். அவர்கள் கண்களில் கண்ணீர் துளிர்த்தது.

''இனி நாம் பிரியக் கூடாது'' என்று தழுதழுத்த குரலில் கூறினாள் பத்மாவதி.

அப்பொழுது அலி ஒருவன் உள்ளே ஓடி வந்தான்.

''தம்பிரான் சுவாமிகளும் மார்த்தாண்ட வர்மரும் புறப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். தேவி மெல்லிளங் கோதையாரை உடனே வரும்படி கூறினார்கள்'' என்றான்.

பத்மாவதி, ''கோதை'' என்று கதறினாள்.

கல்யாணி அவர்கள் முகத்தையே பார்த்தாள்.

நாயகன் கட்டளைக்கிணங்கக் கோதை புறப்படத் தயாரானாள்.

பத்மாவதி அவளைக் கட்டிப் பிடித்துக் கொண்டாள்.

''அப்படியே நில். அசையாதே!'' என்று கத்தினாள் கல்யாணி.

(தொடரும்)

# மனித குலத்தை மிகப் பரவலாகப் பாதிக்கும் நோயால் பீடிக்கப்பட்டுள்ளவர்களில் நீங்களும் ஒருவராக இருக்கலாம்...



## உங்களுக்கே தெரியாத நிலையில்!

நூற்றுக்கு 95 பேர்கள் பற்சிதைவால் பாதிக்கப்படுகிறார்கள். எனினும் அதிக அக்கறை காட்டாத இந் நோய், காலப் போக்கில் வலிதரும் சொத்தையாக மாறி உங்களைப் பெரும் அவதிக்கு உள்ளாக்கி விடும். எனவேதான் உங்கள் பற்களுக்கு இடைவிடாத பாதுகாப்பு தேவைப்படுகிறது.

## பினகா ஃப்ளோரைட் பற்சிதைவுக்கு எதிராக நீடித்த பாதுகாப்பளிக்கிறது

பற்சிதைவை 50 சதவிகிதம் வரை ஃப்ளோரைட் குறைக்கிறது என விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஆகவே தவறாமல் பினகா ஃப்ளோரைடினால், நாள்தோறும் காலையிலும், படுக்கை வேளையிலும் பல் துலக்குங்கள். இதன் தனிப்பட்ட, நீடித்து நிற்கும் ஆற்றல் பல் எனாமலைப் பலப்படுத்துகிறது. பற்களைச் சிதைக்கும் கிருமிகளின் வளர்ச்சியையும் வலிதரும் சொத்தையையும் தடுக்கிறது.




**பல்லுக்கு உறுதி,**
**பற்சிதைவுக்கு எதிரி—**

# பினகா ஃப்ளோரைட்

U-BF/115 TAM

# சந்ததி

குலப் பெருமை பற்றிச் சதா பேசும் பாரிஸ்டர் செண்பகராமனின் ஏகபுதல்வன் ராதாராமன். அயல்நாடு சென்று படித்துப் பட்டம் பெற்றுத் திரும்பிய அவனுக்குப் புற்றுநோய். ஒரு வருஷத்துக்குள் அவன் இறந்துவிடுவான் என்ற நிலையில், செண்பக ராமன் அவனுக்கு மணம் செய்து வைத்து அதன் மூலம் தம் சந்ததியையும் அடையத் தீர்மானிக்கிறார். அதற்குப் பலி ஆடு மாதிரி ஒரு பெண் கிடைக்கிறாள்.

என்னெஸ்ஸென் தியேட்டர்ஸின் வெற்றி நாடகமான ''சந்ததி'' திரைப்படமாக வந்திருக்கிறது. மேஜர் சுந்தரராஜன் பாரிஸ்டர் செண்பகராமன். படத்துக்கு உயிரூட்டுபவரே அவர்தான்.

சிவகுமார், ராதாராமன். தாம் ஏற்ற பாத்திரத்துக்கு நியாயம் வழங்கியிருக்கிறார்.

ஸ்ரீப்ரியாவுக்குச் சற்றுச் சிரமமான பாத்திரம் — காபரே டான்ஸ்க்காரியாக வந்து பிறகு ஒருவனுக்குப் பத்தினியாகவும் இருக்க வேண்டும் என்றால்....? முன்னதில் அலட்சியம்.... பின்னதில் பொறுப்பு — இரண்டிலும் ரசிகர்களுக்கு மன நிறைவைத் தருகிறார். ஸ்ரீகாந்த் வில்லன் — வழக்கமான வில்லன்தான் என்றாலும், திரைக்கதை தொய்ந்து விடாமல் இருக்கப் பெரிதும் உதவுகிறாரே !

தேங்காய் சீனிவாசன் ஏற்றிருக்கும் வயதான டாக்டர் பாத்திரம்தான் ''சந்ததி''யில் இன்றியமையாத பாத்திரம்; அந்தஸ்து பற்றியும் குலப் பெருமை பற்றியும் சதா அலட்டிக் கொள்ளும் பாரிஸ்டர் செண்பகராமனின் பிறப்புப் பற்றிய ரகசியத்தை அறிந்த ஒரே நபர் அவர்தான். அவர் மட்டும் இல்லையென்றால் ''சந்ததி'' சரியான முடிவைப் பெற முடியாமல் தவித்துப் போயிருக்கும். ''சந்ததி'' நாடகத்தில் அந்தப் பாத்திரத்தை ஏற்று நடித்த வி. ராஜகோபால் மிக நன்றாக நடித்து ரசிகர்களின் கையொலியைப் பெற்றார். தேங்காய் சீனிவாசன், அதே பாத்திரத்தில் நன்றாகவே நடித்தார் என்றாலும், அந்த நடிப்பு வெறும் 'இமிடேஷன்' சரக்காகிவிட்டது. அந்த நாடக நடிகரையே படத்திலும் நடிக்க வைத்திருந்தால் என்ன? 'ஸ்டார் வால்யூ'வைக் கட்டிக் கொண்டு அழுகிற வரையில் திரை வானில் புது முகம் தலை காட்ட முடியாது.

கதை, வசனம் எழுதிய கௌசிக்தான் டைரக்ஷன் பொறுப்பையும் ஏற்றுச் சிறப்பாக நிர்வகித்திருக்கிறார். தமிழ்ப் படங்களின் தனி உடைமையாகிவிட்ட கத்திப் பேசும் வேதனை இந்தப் படத்திலும் தொடர்கிறது.

கடைசிக் காட்சியில், கிழட்டு டாக்டர், பாரிஸ்டரின் பூர்வோத்திரத்தைச் சாங்கோபாங்கமாக நீண்ட நேரம் நவின்று படத்தின் கலையையே கெடுத்து விடுகிறார்.

சரியான அறுவை.

— காந்தன்

முன்னே வென்ற ரோஜா

மலர் காட்டும் மணமே
மணவாளன் குணமே
விண்ணவர் சுகத்தினை
மண்ணினில் பெறவே
மங்கை மலர் நாட
வாழ்வின் பொருள் தேட,
முன்னே வென்ற வனப்பு
வெற்றிவாகை சூட்டுமே!

மேலட்டை வண்ணப்படம்: திலீப் பானர்ஜி



# பாடுவோம் பாப் மியூசிக்!

3

கதை:
**தமயந்தி / சாருகேசி**

சித்திரம்:
















நாளைக்கு சபா மெம்பர்ஸ் மீட்டிங்கில் இதைச் சொல்லி விடுவோம்.
அப்புறம் அனிவர்சரி புரோக்ராம் யார் என்று தீர்மானிக்க வில்லையே சார்... டயம் இல்லே. அரேஞ்ச் பண்ணி, ஒப்புக் கொண்டு, பப்ளிஸிடி பண்ணி...


என்ன செய்கிறது என்று தெரியவில்லே. சும்மா கச்சேரி, டான்ஸ், டிராமா என்று போடுவதை விட வேறு ஏதாவது...
சார், சபா மெம்பர்களையே ஏதாவும் கதம்ப நிகழ்ச்சி மாதிரி பண்ணச் சொன்னால் என்ன?


ஐயையோ, வேண்டவே வேண்டாம். அப்புறம் ஒவ்வொருத்தனும் நரிக்குறவன் மாதிரியும் ரிக்ஷாக்காரன் மாதிரியும் வந்து ஸ்டேஜை விட்டு இறங்க மாட்டான்.
ஏன், ஒரு தடவை ஒரு சபா செக்ரடரி மாதிரி வந்து கழுத்தை அறுத்துவிட்டான் ஒருத்தன். மானம் போயிற்று.


எஸ்.. எஸ். அதெல்லாம் ஓணானை மேலே விட்டுக் கொண்ட கதையாயிடும்... எதற்கும் நாளைக்கு மீட்டிங்கிலே இதைப் பத்திப் பேசுவோம்.


விவாதிக்க நிறைய ஆள் இருக்கும் சார். முடிவெடுக்க எவனும் இருக்க மாட்டான்.
உயிரெடுக்க நிறைய ஆள் இருப்பான்!


அதையெல்லாம் நான் சமாளித்துக் கொள்கிறேன். நீங்கள் நாளைக்கு மீட்டிங்கில் இதை எடுத்து விடுங்கள்.
சரி சார், நாளைக்கு டிஸ்கஸ் பண்ணிடுவோம்.
எனக்கு ஒரு பயம் சார்...

தொடரும்

# அப்பாடா சுகம்

நான் ஏழாவது வகுப்புப் பரீக்ஷை எழுதாமலேயே படிப்பை முடித்துக் கொண்ட போது எதிர்காலத்தில் என்ன செய்வதென்று கேள்வி எழுந்தது. கடவுள் கிருபையால் என் படிப்பு பாதியில் நிற்கும் முன்பே எனக்குக் கல்யாணம் ஆகியிருந்தது. ஊளார்க் வேலைக்குப் போகலாமாவென்று யோசித்தேன். அது கைக்கு எட்டாததாக இருந்தது. பட்டதாரிகளுக்கே அவர்கள் செய்த புண்ய வசத்தால் கல்தாக் கிடைத்துக் கொண்டிருந்ததென்றால் ஏழாவது வகுப்புப் படித்த என்னுடைய நிலையைப் பற்றிக் கேட்பானேன்! வேறு ஒரு வழியும் இல்லாவிடில் எழுத்தாளனாகப் போனால் போச்சு என்ற ஒரு யோசனை தோன்றியது. எழுத்தாளனுவதற்குப் பட்டதாரியாக வேண்டியதில்லை. வித்வான் படிப்பும் தேவையில்லை. என் இதற்குக் கொஞ்சமும் படிப்பே தேவையில்லை. கேள்வி ஞானத்துக்கும் அவசியம் இருப்பதாகச் சொல்ல முடியாது. காகிதம், பென்சில், அவகாசம் இம்மூன்றும்தானே தேவை. நல்ல வேளையாக அந்தச் சமயத்தில் இம்மூன்றுக்கும் ஒரு குறையுமில்லை.

எனவே நான் எனது முதல் கட்டுரையை மிக ஊக்கத்துடன் தயார் செய்தேன். ஒவ்வொரு வாக்கியத்தையும் எழுதிப் படித்துப் பொறுக்கி யமைத்தேன். எனது ஒவ்வோர் எண்ணத்தையும் ஒன்றுக்கு நாலு தடவையாக மெருகு ஏற்றினேன். இரவில் யோசித்துப் பார்த்தேன், பகலில் எழுதினேன். - இருபத்தைந்து தினங்களில் கட்டுரையின் கையெழுத்துப் பிரதி தயாராயிற்று. அடித்துத் திருத்திச் சரிசெய்து முடித்ததில் குறைந்தபக்ஷம் மூன்று குயர் காகிதங்களுக்கு மேல் செலவழிந்திருக்கும். ஆனாலும் கட்டுரை அழகாக அமைந்தது. என்ன சொல்வேன்? எவன் இதைப் படிக்கிறானோ அவன் அதன் ருசியை, ருசி பார்த்துக் கொண்டே யிருப்பான். தயிர் வடையைச் சுவைத்தவன் போல!

எனது கட்டுரையை உயர்ந்த பத்திரிகைக்கு ஒரு நல்ல சுபயோக சுப முகூர்த்தம் பார்த்து அனுப்பி வைத்தேன்.

அன்று முதல் கட்டுரை ஏற்றுக்கொள்ளப்படும் செய்தியை எதிர் பார்க்கத் தொடங்கினேன். ஒரு வாரமாயிற்று. வரவில்லை. பத்திரிகையின் ஆசிரியருக்கு ஆயிரம் காரியமிருக்கும். அடுத்த வாரம் வந்துவிடும் என்று நினைத்தேன். இரண்டாவது வாரம் கழிந்தபொழுது தபால் இலாகாவின் திறமைக் குறைவென எண்ணினேன். தபால்காரரை மிரட்டினேன். அக்கம் பக்கத்தாரிடமெல்லாம் சென்று தவறுதலாக என் கடிதம் அவர்களிடம் சேர்ந்திருக்கிறதா என்று விசாரித்தேன். மூன்றாவது வாரத்தில் ஆசிரியரிடமிருந்து பதில் வரவேண்டுமானால் ரிப்ளை கார்டல்லவா எழுதியிருக்க வேண்டும் என்று என் புத்தியில் உதயமாயிற்று. உடனே

ஹிந்தியில்: ஸ்ரீ கோபால்பிரசாத் வியாஸ்



ரிப்ளை கார்டு ஒன்று எழுதிப் போட்டேன். அப்பாடா! இப்பொழுது கட்டாயமாய்ப் பதில் வந்தே தீரும்.

விரகத் தீயால் தவிக்கும் அநேகம் தலைவிகளுடைய உதாரணங்கள் இன்னும் எனக்கு மனப்பாடமாக இருக்கிறது. அந்நாட்களில் தபால்காரனுடைய வருகைக்காக என்னிடத்தில் தோன்றிய ஆர்வத்தை, காதலன் வருகையை எதிர்பார்த்துக் காத்திருக்கும் ஆயிரமாயிரம் காதலிகளுடன் ஒப்பிட்டால், அவர்கள் தோற்று விடுவர். தபால் வேளை வந்தவுடன் நான் குறுக்கும் நெடுக்குமாக நடக்க ஆரம்பித்தேன். சிலவேளை நடை தளர்ந்து உட்காருவேன். திரும்பவும் எழுந்து நடப்பேன். என்ன செய்தும் பயனில்லை. என் கட்டுரையை எந்த ராவணன் அபகரித்துப் போனானோ, அதைப் பற்றிய தகவல் ஒன்றும் கிடைக்கவில்லை.

மனத்தில் அநேக எண்ணங்கள் தோன்றின. இரவில் விதம் விதமான கனவுகள் கண்டேன். என்னுடைய இந்தச் சங்கட நிலையும், தபால்காரனை எதிர்பார்க்கும் பரிதாபமும் சேர்ந்து என் மனைவியின் மனத்தில் வேறு விதமான எண்ணங்களைத் தோற்றுவித்தன. நான் செய்வது அறியாது தவித்தேன்.

இப்படியாக வருஷத்தின் மூன்றிலொரு பாகம் முடிந்து ஒன்றன் பின் ஒன்றாகப் பல டஜன் கார்டு, கவர்கள் ஆசிரியராகிய நதியில் மூழ்கி விட்டபின் என் கட்டுரை பிரசுரமாகும் என்ற ஆசையை விட்டு இன்னும் காலம் தாழ்த்தாமல் கட்டுரையைத் திருப்பி அனுப்பும்படி தபால் தலையை அனுப்பி வைத்தேன்.



தபால் தலைகளை வேறொரு நல்ல காரியத்துக்குப் பயன்படுத்திக் கொண்டு விட்டார்கள் போலும்! என் கதை எனக்குத் திரும்பி வரவில்லை.

என் முதல் கதையின் நிலையே இப்படி. ஆனாலும் நான் என்னவோ, நிச்சயமாக எழுத்தாளனாக ஆகியே தீருவதென்று தீர்மானித்து விட்டேன். ஆசிரியரை எப்படியாவது என் கட்டுரையை வெளியிட வைப்பது என்று தீர்மானம் செய்து கொண்டேன். அதே கட்டுரையை என் மனைவியின் கையால் ஒரு நகல் எழுதச் சொல்லி, விரஜ சுந்தரி தேவி என்று கையெழுத்திட்டு மறுபடியும் அதே பத்திரிகைக்கு அதே ஆசிரியருக்கு அனுப்பி வைத்தேன்.

அன்று ஆசிரியருக்கு ஒரு நாள் முன்னதாகவே தபால் கிடைத்ததனவோ அல்லது அன்றையத் தபால்கள் எல்லாவற்றுக்கும் மேலாக விரஜசுந்தரி தேவியின் கவர் இருந்ததோ அல்லது ஆசிரியருக்கு வேறு வேலையிருக்கவில்லையோ தெரியவில்லை. அடுத்த தபாலிலேயே உற்சாகத்துடன் பதில் எழுதியிருந்தார்:

விரஜ சுந்தரி,

இப்பொழுதுதான் உங்களுடைய கட்டுரை கிடைத்தது. அதன் முதல் வரியே என்னைத் தன் பக்கம் இழுத்துக் கட்டுரையை முழுக்கப் படித்த பிறகே என்னை இவ்வுலக நினைவுக்குக் கொண்டு வந்தது. படித்து முடித்தவுடனேயே உங்களுக்குக் கடிதம் எழுதுகிறேன். உங்களை எப்படிப் புகழுவேன்! வெகு நாட்களாக இப்படி ஓர் அழகிய கட்டுரையைப் படிக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைக்கவில்லை. இந்த வார மலரிலேயே இக்கட்டுரை பிரசுரமாக இருக்கிறது. ஆனால், தங்கள் முதல் கட்டுரையைத் தங்கள் புகைப்படம் இல்லாமல் பிரசுரிக்க மனம் வரவில்லை. உங்களுடைய கலை நிறைந்த கையெழுத்து உங்கள் கலை ரசனையையும், அபூர்வமான தன்மையையும் தெரிவிக்கிறது. உங்களுடைய புகழ் பொங்கிய வருங்காலத்தைப் பற்றி எனக்குக் கொஞ்சம் கூடச் சந்தேகமே இல்லை. உங்களுடைய புகைப்படத்தைப் பிரசுரிப்பதனால் பத்திரிகையின் அழகு மேன்மையுறும் என்பதில் சந்தேகமே யில்லை. மறக்கவோ, மறுக்கவோ வேண்டாம். மறு தபாலில் உங்களுடைய படத்தை அனுப்பி வையுங்கள். எதிர் நோக்கிக் காத்திருக்கிறேன்.

பின் குறிப்பு: இனி எழுதும் கட்டுரை-கடிதங்களை என் சொந்த விலாசத்துக்கே எழுதுங்கள்.

தங்களுடைய,

தமிழாக்கம்: ராஜலக்ஷ்மி ராகவன்



இருபத்தோரு வயதான கிரிஸ் எவர்ட் — விம்பிள்டன் வீராங்கனை பெண்களுக்கான பரிசுத் தொகையை ஆண்களுக்குச் சமமாக உயர்த்தா விட்டால் அடுத்த வருடம் விம்பிள்டன் டென்னிஸ் தகர்த்து தொடர்வது இயல்பாக ஆரியம் என்று போராடத் தொடங்கி இருக்கிறார். —குண்டுமணி.

ஆசிரியருடைய உறை ஆகாய நிறத்தி லிருந்தது. அதில் இனிய நறுமணங் கமழ்ந்து கொண்டிருந்தது. குறி வைத்த இடத்தில் அம்பு சேர்ந்து விட்டது. ஆனால் இப் பொழுது யாருடைய படத்தை அனுப்புவது? எந்த நல்லெண்ணத்துடன் மனைக் கிழத்தி கட்டுரையையும் கடிதத்தையும் நகல் எடுத் துக் கொடுத்தாளோ, அதே போலத் தன் போட்டோவையும் கொடுத்து உதவுவாள் என்கிற நம்பிக்கை இல்லை. தலைவர்களிட மிருந்து ஊழியர்கள் வரை எல்லோரையும் பாராட்டி யிருக்கிறேன். வித்வான் கவி முதல் முட்டாள்கள் வரை எல்லோரையும் புத்தியினால் எதிர்த்திருக்கிறேன். ஆனால் ஐந்தடி மூன்றங்குலமுள்ள மனைக் கிழத்தியின் முன்னால் மட்டும் என்னுடைய பேச்சுத் திற னெல்லாம் எங்கோ மறைந்து விடுகிறது.

நான் மனைக் கிழத்தியின் முன்னால் இந்த விஷயத்தை ஆரம்பித்தேன். சரியாகக்கூடச் சொல்லி முடிக்கவில்லை. "பெண்டாட்டியின் படத்தைப் பேப்பரில் பிரசுரித்துக்கொண்டு திரிவது ஆடவர்களுக்கு அழகுதான்" என்று கர்ஜித்தாள்.

ஐயோ கடவுளே! நல்ல மனிதர்கள் தங்கள் படங்கள் பேப்பரில் பிரசுரமாவதற்காக என்னென்ன செய்யவில்லை என்பதை அவ ளுக்கு எப்படி அறிவுறுத்துவேன். இருந்தும், உள்ளூறப் பயந்து கொண்டே வெளிப்படை யாக, "இங்கே பாரு, பேப்பரிலே பெரிய மனிதர்களின் படங்களைத்தான் பிரசுரிப் பார்கள்" என்றேன்.

"வேறு பெயரிலே கட்டுரையைப் பிரசுரிப் பது போல், நீங்களே ரவிக்கையும் புடவையும் அணிந்து புகைப்படமும் எடுத்துக் கொள் ளுங்கள்" என்றாள்.

சட்டென்று எனக்கு அது ஒரு வழியாகத் தோன்றியது. என்னுடைய முகத்தில் மீசை இன்னும் முழுதுமாக முளைக்கவில்லை. இளம் பிராயத்தில் நாடகங்களில் பெண் வேடம் போட்டு வெகு அழகாக நடித்திருக்கிறேன். இப்பொழுதும் ஒரு தரம் போட்டுப் பார்ப் போமே என்று யோசித்தேன்.

ஆனால் படம் வெறும் பெண்ணின் படமாக இருந்தால் மட்டும் பயன் என்ன? அழகிய தாகவுமல்லவோ இருக்க வேண்டும்? மனத் தில் மின்னல் போல் ஓர் எண்ணம் பளிச்சிட் டது. நான் என் மனத்தில் உள்ள எண்ணங் களை யெல்லாம் உருவாக்கி ஆசிரியருக்கு ஒரு கடிதம் எழுதினேன்.

. . . . . . . . . . !

உங்களை எந்தப் பெயரிட்டு அழைப்ப தென்று என் அறிவுக்கு எட்டவில்லை. என் உயர்வுக்கு வழி காட்டிய தேவ தூதனே! உங்கள் கடிதம் கிடைத்ததிலிருந்து நான் புது மாதிரியாய் மாறியிருக்கிறேன். கிருஷ்ணனு டைய புல்லாங்குழல் நாதத்தைக் கேட்டு ஜடப் பொருளும் சேதனப் பொருளாக மாறியதைப் போல் உங்கள் கடிதம் கிடைக்கப் பெற்றதிலிருந்து என் உடம்பெல் லாம் புளகாங்கிதம் அடைகிறது. என் கட்டுரையைப் போற்றுபவரே! உங்கள் விரலால் உறங்கிக் கொண்டிருந்த வீணையை மீட்டிவிட்டீர்கள். நான் முழுமை பெற்று விட்டேன். துளிர்த்தெழுந்து விட்டேன். பிறவி எடுத்த பயனைப் பெற்று விட்டேன். ஆம். நான் எழுதுவேன். நீங்கள் சொல் வதனால் எழுதுவேன். உங்களுக்காகவே எழு துவேன். உங்கள் கனவை நிறைவேற்றாமல் இருக்க மாட்டேன்.

கதை கட்டுரைகளைத் தேர்ந்தெடுக்கும் நிபு ணரே! என் படத்தைக் கேட்டுள்ளீர்கள். உங்களுடைய வேண்டுகோளை நிறைவேற்ற எனக்கு ஆசைதான். என்னைத் தப்பாக எடுத்துக் கொள்ள வேண்டாம். நான் மிகவும் இக்கட்டில் மாட்டிக் கொண்டுள்ளேன். நீங் களும் ஒரு பெண்ணாயிருந்தால் என் துன் பத்தைச் சரியாய்ப் புரிந்து கொள்வீர்கள். நான் எந்த மனிதரைக் கைப்பற்றியிருக்கி றேனோ, அவர் பெயருக்குத்தான் கணவர். எப்படி விண்டுரைப்பேன்? சுருக்கமாகச் சொல் லப்போனால் நான் மூன்றென்றால் அவர் ஆறென்பார். நான் கிழக்கென்றால் அவர் மேற்கென்பார். நான் வசந்தம் என்றால் அவர் இலையுதிர் காலம் என்பார். நான் குழல் என்றால் அவர் தவில் என்பார். நான் எழுதுவதையும் படிப்பதையும் கனவிலும் விரும்ப மாட்டார். எங்கும் போக வர அனுமதிக்க மாட்டார். என்னுடைய நாச மாய்ப்போன சௌந்தர்யமெல்லாம் சாபக் கேடு போல் அழிந்து வருகிறது. போதும், போதும்! நான் பெட்டிப் பாம்பாக அடக்கி வைக்கப்பட்டிருக்கிறேன்.

இனி நான் பணிய மாட்டேன். நான் ஒன்றும் அவருக்கு அடிமை இல்லை. உங்கள் கடிதம் என்னுள் எப்படி எரிமலையைக் குமுற வைத்திருக்கிறது என்பது உங்களுக்குத் தெரி யாது. என் உயிரை விட்டாவது என் கௌர வத்தைக் காப்பாற்றிக் கொள்வேன். என் னுடைய அறிவை மங்க விட மாட்டேன். என்ன வேண்டுமானாலும் ஆகட்டும். நான் வெற்றி பெற்றே தீருவேன். என்னைக் கடைத் தேற்ற வந்தவரே! இந்த வார்த்தையை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள்.

வேறென்ன எழுத? யாரோ வருகிறாற் போல இருக்கிறது. வேறு யாருமில்லை. அவரேதான். கடிதத்தை முடிக்கிறேன்—கட்டுரையை இப்போதைக்குப் படமில்லாமலே பிரசுரிக்கவும். கூடிய சீக்கிரத்தில் படம் அனுப்ப முயல்கிறேன்.

கண் இமையால் உங்கள் கடிதத்தை எதிர் நோக்குகிறேன்.

தங்கள்
விரஜ சுந்தரி

கடிதத்தை ஒரு தரம் படித்தேன். இரு தரம் படித்தேன். சுவாரசியமாக இருந்தது. கூடவே இக்கடிதத்தை மனைவியின் கையினால் எப்படி நகல் எடுக்கச் சொல்வது என்ற கலவரமும் உண்டாயிற்று. மனைவியிடம் இதைப் பற்றிப் பேசுவது தேன் கூட்டில் கை விடுவது போலத்தான். சொல்லாத போனாலும் வேறு வழியில்லை. சற்றே தைரியமாகத்தான் காரியத்தில் இறங்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தேன். முகத்தைக் கோபமாக வைத்துக் கொண்டு, ''இந்தா, இந்தக் கடிதத்துக்கு ஒரு நகல் எடுத்துக் கொடு. எனக்கு இப்பொழுதே வேண்டும்'' என்றேன்.

அவள் என்னைக் காலிலிருந்து தலைவரை கவனமாகப் பார்த்தாள். ஒன்றும் பேசவில்லை. கையை நீட்டிக் கடிதத்தை வாங்கிக் கொண்டாள்.

கடிதத்தைப் படித்தாளோ இல்லையோ, அவள் உடல் நெருப்புத் தழல் போலக் கொதித்தெழுந்தது. ''யாரது இந்த மானங்கெட்ட விரஜசுந்தரி?'' என்றாள்.

இந்த அசம்பாவிதமான கேள்வியில் என் மனநிலை தடுமாறி விட்டது. தலை சுற்றியது. ''அடே, யாருமில்லை. இந்தப் பேர் வந்து பொய்ப் பேர்தான்'' என்றேன்.

இதன் நடுவிலேயே அவள் குறுக்கிட்டு, ''ஐயோ கடவுளே! நான் உங்களை ரொம்ப நல்லவர் என்று அல்லவா நினைத்தேன்! அம்மாடியோ! என் தலையெழுத்து இப்படி ஆயிடுத்தே!'' என்று கத்தினாள்.

இவ்வார்த்தைகளைச் சொல்லும்போதே அவள் கண்களிலிருந்து கங்கையும் யமுனையும் பெருக்கெடுத்தன. என்னுடைய நிலைமையோ கேட்க வேண்டாம். பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங்காய் முடிந்த மாதிரியிருந்தது. சமாதானம் செய்யச் செய்ய விஷயம் முற்றிப் போய்க் கொண்டே யிருந்தது. ஆயிரம் சத்தியம் செய்தேன். ஆயிரம் மன்னிப்புக் கோரினேன். கடைசியில் உண்மையைச் சொல்லுகிறேனே. குனிந்து காலைக்கூடப் பிடித்துக் கொண்டேன். கடிதத்தை நகல் எடுப்பது ஒருபுறம் இருக்கட்டும்; விரஜசுந்தரி தேவி வெறும் காகிதப் பெண்தான் என்பதை ஏற்க மறுத்து விட்டாள்.

பதினெட்டு ஆண்டுகளாக என் மனைக் கிழத்தியின் பெட்டியின் அடிப்பாகத்தில் இந்த அனுப்பாத கடிதம் கிடந்தது. இந்தத் தடவை தீபாவளியின்போது வீடு ஒழிக்கும் சமயம் அது கையில் அகப்பட்டது. அப்பொழுது உங்களுக்கும் சொல்லலாமே என்று யோசித்தேன். இந்தக் கடிதம் அந்தக் காலத்தில் ஆசிரியரிடம் போய்ச் சேர்ந்திருந்ததென்றால்...?



# அமெரிக்க சுதந்திரத்தின் பிறந்த தினம்!

- ஃபிலடெல்ஃபியா நகரத்தின் 'பிறந்த நாள் கேக்' ஐந்து மாடிக் கட்டடத்தின் உயரம் இருந்தது. இங்குதான் சுதந்திரப் பிரகடனம் பிறந்தது. சுதந்திர மண்டபத்தில் கையெழுத்தாயிற்று.

- உலகிலேயே மிக நீளமான உணவு மேசையில் ஒன்டேரியோ நகர்வாசிகள் விடுதலை நாள் விருந்துண்ண அமர்ந்தனர். இந்த மேசையின் நீளம் எவ்வளவு தெரியுமா? இரண்டு மைல்! கலிபோர்னியா மாநிலத்தில் இருக்கிறது இந்த நகர்.

- லாஸ் ஏஞ்செல்ஸ் நகர் எடுத்த ஊர்வலம் 18 மைல் நீளம் இருந்தது! பாம்பு மாதிரி நெளிந்து நெளிந்து சென்ற இந்த ஊர்வலம் விழா எடுப்பவர்களை ஓரிடத்தில் கடந்து செல்ல எட்டு மணி நேரம் ஆயிற்று.

- காலப் பெட்டகம் - முதலாவது நூற்றாண்டு விழாவின்போது வாஷிங்டனில் புதைக்கப்பெற்ற 'காலப் பெட்டகத்தினை' எடுத்துத் திறந்து பார்த்து, சோதித்து, மீண்டும் மூடி முத்திரையிட்டு, ஜூலை நாலுக்கு மறுநாள் மீண்டும் ஒரு நூற்றாண்டு துயில் கொள்ளப் புதைத்து விட்டனர்.

- இப்படிப் பல நூதன நிகழ்ச்சிகள் இரண்டாம் நூற்றாண்டு விழாவின்போது. இந்தக் குதூகலத்தையெல்லாம் பிரதிபலிக்கும் விதத்தில் ஒரு விமானத்தின் மேல் பரப்பில் பல்வேறு வர்ணங்களில் ஓவியம் தீட்டியுள்ளார் அலெக்ஸாண்டர் கால்டர்.

--யு.எஸ்.ஐ.எஸ்.

20-அம்ச திட்டம்




20-அம்ச திட்டம்



20-அம்ச திட்டம்

## அம்சம்: 3

நிலமற்ற ஏழைகளுக்கு வீட்டு மனைகள் வழங்கப்படுதல்.



20-அம்ச திட்டம்

## அம்சம்: 4

கொத்தடிமை முறை ஒழிப்பு.





வெளியீடு:
இயக்குநர்: செய்தி, மக்கள் தொடர்புத் துறை.
தமிழ்நாடு அரசு, சென்னை-600 009



ஸ்ரீ காஞ்சி ஆசார்யாள்
ஓவியத்தின் ஒரு பகுதி

# படித்தோம் சொல்கிறோம்

## மண்ணுக்குள் வைரம்!

'வைரம் மண்ணுக்குள் புதைந்து கிடப்பதுதான். ஆனால் மண்ணை வெட்டி அதை வெளியே எடுத்துச் சீர்ப்படுத்தும்போது மறுபடியும் அதன் மேல் மாசு படிந்துவிடக் கூடாதல்லவா?'

இது க. பஞ்சாபகேசன் 'மண்ணுக்குள் வைரம்' சிறுகதையில் வரும் ஒரு வாக்கியம். ஆனால் இப்படிப்பட்ட சந்தேகம் ஒன்றும் க. பஞ்சாபகேசன் விஷயத்தில் கிடையாது. மண்ணுக்குள் இருந்த வைரமாம் பஞ்சாபகேசனைப் பத்திரிகை உலகம் வெளிக் கொணர்ந்து பட்டை தீட்டி ஜொலிக்க வைத்திருக்கிறது. அவரும் தம் எழுத்தில் மாசு படிய விடவில்லை. கண்ணும் கருத்துமாய் எழுத்துத் தூய்மையைக் காத்து வருகிறார்.

மனித உள்ளங்களின் உணர்ச்சிகளை எழுத்தாளர் பஞ்சாபகேசன் தமக்கென வகுத்த உயிரோட்ட நடையில் தரும் அழகைப் பாராட்டாமல் இருக்க முடியாது! உள்ளத்தைத் தொடும் பல நல்ல சிறுகதைகள் கொண்ட தொகுதி 'மண்ணுக்குள் வைரம்'.

காதலன் குமாருக்கு அபிராமி எழுதிய கடிதம் 'மூன்றாவது கட்டடம்' கதையில் வருகிறது:

''நீங்கள் வெளியில் ஆயிரம் கட்டடங்களைக் கட்டலாம். மாமாவும் ஆயிரம் கோயில்களும் மண்டபங்களும் கட்டலாம். ஆனால் ஒரு பெண் தன் உள்ளத்துக்குள் கட்டும் கட்டடத்துக்கு முன்பு எதுவும் ஈடாகாது. அதன் அஸ்திவாரத்தை எந்தச் சக்தியாலும் தகர்க்க முடியாது — அபிராமி!''

ஆயிரம் கட்டடங்கள் கட்ட, அஸ்திவாரங்கள் போட டால்மியா சிமெண்ட் செல்கிறது. அந்தத் தொழிற்சாலையில் பணிபுரியும் பஞ்சாபகேசனின் கருத்து அஸ்திவாரங்களையும் கற்பனைக் கட்டடங்களையும் மதித்து அந்தத் தொழிற்சாலை அரங்கிலேயே அவ்வூர்வாசிகள் அவருக்கு ஒரு பாராட்டு விழா நடத்தினர். திரு கி. வா. ஜ. தலைமை வகித்தார். க. பஞ்சாபகேசன் முப்பது ஆண்டு இலக்கிய சேவைமலரைத் திருச்சி தமிழ் எழுத்தாளர்களின் போஷகர் திரு அ. வெ. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார் வெளியிட்டு, தொழிலக ஜெனரல் மானேஜர் ஆர். எல். பன்ஸலிடம் முதல் பிரதியைத் தந்தார். கதாபாத்திரங்களின் குண இயல்புகளைப் பாரதியாரின் கவிதைகளில் தோய்ந்த பஞ்சாபகேசன் வடித்துத் தரும் அழகே தனிதான்! அதனால்தானோ என்னவோ அவருக்கு வழிகாட்டியாக விளங்கிய பாரதியார், அமரர் கல்கி இருவருவப் படங்களை அன்று திறந்து வைத்தார்கள்.

பலப் பல எழுத்தாளர்களும், கவிஞர்களும் பஞ்சாபகேசனின் எழுத்தாற்றலைப் பாராட்டினார்கள். இந்தப் பாராட்டு விழாவிலேயே 'மண்ணுக்குள் வைரம்' நூலும் வெளியிடப்பட்டது. போதாவா பெருமைகள்?

—பி. எஸ். எம்.

பிரசுரம்: அருணோதயம், ராயப்பேட்டை, சென்னை — 14; விலை: ரூ. 6.00.



விழா கண்ட திரு க. பஞ்சாபகேசன்

## ஆஸ்திகன்

வி.ஸ. காண்டேகர் அதிர்ஷ்டசாலி. அவர் சமீபத்தில் ஞான பீடப் பரிசாகிய லட்ச ரூபாய் பெற்றதைப் பற்றிக் கூற வரவில்லை. அவர் எழுதியதையெல்லாம் தமிழில் மொழிபெயர்த்து, மகாராஷ்டிர மாநிலத்தில் அவர் எவ்வளவு பிரபலமாயிருக்கிறாரோ அதற்கு ஒரு படி மேலாகவே தமிழகத்தில் அவரைப் பிரபலப்படுத்த ஒரு மனிதர் அவருக்குக் கிடைத்தார். அவர் கா. ஸ்ரீ. ஸ்ரீ. தமிழ், சமஸ்கிருதம், மராத்தி, ஹிந்தி ஆகிய பல



ரிஷிகளும் கோத்ரங்களும்
நூலின் மேலட்டை

மொழிகள் படித்து அவற்றில் சாரமானவற்றைக் கிரகித்து வைத்திருப்பவர்.

இப்பொழுது கா. ஸ்ரீ. ஸ்ரீ. அவர்களே, தம் சொந்தப் பொறுப்பில் காண்டேகரின் எட்டு சிறந்த புதிய கதைகள் கொண்ட தொகுதியை, ''ஆஸ்திகன்'' என்ற தலைப்பில் வெளியிட்டிருக்கிறார்கள். இதிலுள்ள ஒவ்வொரு கதையும் கருத்தாழமும் கதைச் சிறப்பும் கொண்டது. ''உலகத்துப் புதிர்கள் அறிவினால் மட்டும் விடுபடுவதில்லை என்று உபதேசித்தாய். எவ்வளவு பெரிய உண்மை அது'' என்று ஒரு பாத்திரம் கூறுவதாக ஆஸ்திகன் என்ற கதையில் வருகிறது. நாமும் இவ் வரியைப் படிக்கும் போது சிந்தனையில் ஆழ்ந்து விடுகிறோம். இதுதான் காண்டேகர் கதைகளின் சிறப்பு.

ஒரு நிறுவனம் செய்ய வேண்டிய காரியத்தைத் தனிமனிதராகச் செய்ய எண்ணி, ஸ்ரீ கா.ஸ்ரீ.ஸ்ரீ., பிரசுரத் துறையில் இறங்கி விட்டார். வாசகர்களுடன் நேரிடையாகத் தொடர்பு கொள்ளும் ஆர்வத்தில் நாலு ரூபாய் தமக்கு நேராக மணியார்டர் மூலம் அனுப்பி வைக்கும் பட்சத்தில் ஐந்து ரூபாய் விலையுள்ள இப்புத்தகத்தை அளிப்பதாகக் கூறுகிறார். இப்புத்தகம் நேயர்களிடம் பெறும் வெற்றியைப் பொறுத்துத்தான் அவர் அடுத்தாற்போல் ஞானி துகாராமின், 'ஞானேசுவரி'யை வெளியிட வேண்டும். வள்ளலார் சொன்னார் : ''கடைவிரித்தேன் கொள்வாரில்லை'' என்று. அந்த நிலை கா. ஸ்ரீ. ஸ்ரீக்கு ஏற்பட்டு விடாமல் இலக்கிய அன்பர்கள் கவனித்துக் கொள்ள வேண்டும்.

— எஸ். வி. எஸ்.

கிடைக்குமிடம் : கா. ஸ்ரீ. ஸ்ரீனிவாசாச்சார்யா, 3/5, ஸவுத் பாங்க் ரோடு, சென்னை-600 028: விலை : ரூ. 5.

### ''லோகா சமஸ்தா சுகினோ பவந்து''

தேவி வழிபாட்டின் ஒரு முக்கிய அங்கமாக விளங்குவது ஸ்ரீசக்கரம் மற்றும் ஸ்ரீ மகா மேரு ஆராதனை. இவை போன்ற இன்னும் பல அரிய தெய்வ சாதனங்களை ஸ்ரீ காஞ்சி காமகோடி பெரியவர் அருள் ஆசியுடன் சாஸ்திரோக்தமான முறையில் பஞ்ச லோகத்திலும் மற்றும் வெள்ளி போன்ற இதர லோகங்களிலும் செய்து தருகின்றது நவசக்தி நிலையம்.

அவைகளை உபயோகிக்கும் முறையையும் விளக்கி, அவற்றுக்குரிய தோத்திரப் புத்தகங்களையும் தருவதைப் போற்றாமல் இருக்க முடியாது.

அண்மையில் இவர்கள் ஸ்ரீ காஞ்சி ஆசார்யாள் ஸ்ரீ ஜயேந்திர சுவாமிகள் ஸ்ரீ மகா மேருவைத் தரிசித்து மகிழ்வது போன்ற வண்ணப் படம் வெளியிட்டுள்ளார்கள்.

விலாசம்: விஸ்வகர்மகுரு, எஸ். டி. முருக பூஷணம், நவசக்தி நிலயம், 96—1, லாயிட்ஸ் ரோடு, சென்னை-600086. விலை: ரூ. 3.



கா ஸ்ரீ ஸ்ரீ மொழிபெயர்ப்பில்
காண்டேகர் சிறு கதைகள் — மேலட்டை

### நெல்லை மாவட்ட சுதந்திரப் போராட்ட வரலாறு

தலைப்பே உள்ளுறையைத் தெளிவுபடுத்துகிறது. 'இவ்வளவுதானா?' என்று எண்ணி விடாதீர்கள். தலைப்பு கவர்ச்சிகரமாக இல்லாவிடினும் படிக்கத் தொடங்கினால் மெய்சிலிர்க்கிறது. எப்பேர்ப்பட்ட வீர புருஷர்களை, தியாகிகளைப் பெற்ற மாவட்டம் திருநெல்வேலி என்று வியந்து போவீர்கள்.

வீரபாண்டிய கட்டபொம்மன், ஊமைத்துரை, புலித்தேவன், வ. உ. சி., பாரதி, வாஞ்சிநாதன் இப்படி வீர பரம்பரை செல்கிறது. இவர்களைப் பற்றியெல்லாம் படிக்கும் போதும், காந்திய சகாப்தத்தின் சாத்வீகப் போராட்டத்தில் கலந்து கொண்டு சிறை சென்ற வீரர்களைப் பற்றிப் படிக்கும் போதும் சுதந்திரம் சாமானியமாக வந்துவிடவில்லை, கருக விட்டுவிடக் கூடாது என்ற வீர உணர்ச்சி ஒவ்வொருவருக்கும் எழும். கிடைத்தற்கரிய அரும் செய்திகள் எல்லாம் கொண்டு இந்நூல் விளங்குவதற்குக் காரணம், இதன் ஆசிரியர் ந. சோமயாஜுலு என்பதுதான். சோமயாஜுலு அவர்களின் வாழ்க்கை திருநெல்வேலிச் சீமையின் — ஏன் தமிழ் நாட்டின் — சுதந்திர வரலாற்றில் பின்னிப் பிணைந்து போனது. அவர் நடத்திய நீல் துரை சிலை அகற்றும் போராட்டம், பெர்ஹாம்பூர் பாத யாத்திரை ஆகிய எத்தனையோ நிகழ்ச்சிகள் மெய்சிலிர்க்க வைக்கும் சாகசச் செயல்கள்.

பாரத சுதந்திரப் போரில் நெல்லை மாவட்டத்தின்
பங்கை விளக்கும் நூலின் மேலட்டை



அவர் போராட்டங்களுக்குக் காந்தி மகான் அளித்த ஆசி உள்ளத்தை உருக்குவது. அதே போல் திருநெல்வேலிச் சீமையின் சுதந்திர வரலாற்று நாயகர்களை முற்றும் உணர்ந்த முதுபெரும் அறிஞரான பி. ஸ்ரீ. அவர்களும் தமது அனுபவங்களைத் தந்திருக்கிறார்.

இந்நூல் திருநெல்வேலி மாவட்டத்தை முக்கியமாகக் கொண்டதாயினும் பாரத நாட்டுச் சுதந்திரப் போராட்ட முக்கிய நிகழ்ச்சிகளையும் தொகுத்துத் தருகிறது. எனவே, நூலின் பயன் அதிகரித்துள்ளது. கிட்டத்தட்ட எழுபதாண்டுகள் நிறைவு பெற்ற திரு ந. சோமயாஜுலு அவர்கள், தமது மாவட்டத்தினருக்கும் தமிழ் நாட்டுக்கும் செய்துள்ள பல தொண்டுகளில் தலையாய தொண்டாக இந்நூலைக் கருதலாம். இதை முன்மாதிரியாகக் கொண்டு ஒவ்வொரு மாவட்ட தேசபக்தர்களும் தங்கள் வீர பரம்பரையினரை நினைவுகூர்ந்தால் எதிர்காலத்துக்குப் பயனுள்ளதாக இருக்கும்.

—எஸ்.வி.எஸ்.

கிடைக்குமிடம் : திரு எஸ். என். சோமயாஜுலு. திருநெல்வேலி; விலை: ரூ. 20.00.

**ரிஷிகளும் கோத்ரங்களும்**

ரிஷிகளும் முனிவர்களும் ஆதிபரம் பொருளைக் காணும் முனைப்பில் நின்றதுடன் தம் பின்னோர்களுக்குச் செவ்விய வாழ்க்கை வாழ வழிகாட்டியவர்கள். அவர்கள் பெயரால் கோத்திரங்களும், அவர்களின் வழித் தோன்றல்களின் பிரவரமும் தோன்றின.

இந்த ரிஷிகளும் முனிவர்களும் அந்தணர்களாகத்தான் இருந்தார்கள் என்பதில்லை. எத்தனையோ க்ஷத்திரியர்கள் தங்கள் ஆற்றலால் ரிஷிகளாகிக் கோத்திர — பிரவரங்களை நடத்தி வந்துள்ளனர். இதிலிருந்து மானுடமே முன் நிற்கிறது என்பதும் இனப் பாகுபாடுகள் சமுதாயத்தை இயக்க ஒரு கருவியாகவே உண்டாயின என்பதும் தெரிய வருகிறது. இக்கருத்துக்கு வலுச் சேர்ப்பதாக அமைந்துள்ளது ஸ்ரீ எம். எஸ். ராஜகோபாலாசார்ய ஸ்வாமியின் கட்டுரை.

படை வீரர்கள் பல பிரிவுகளாகப் பிரிந்து தனித் தனிப் பணிகளும் அதற்குரிய பயிற்சியும் பெயர்களும் கொடி முதலியனவும் பெற்றது போல் உலகின் க்ஷேமார்த்தமான பல்வேறு காரியங்களை நடத்தக் கோத்திரப் பிரிவுகள் உண்டாயின என்கிறார்.

ஒரு குடும்பத்தில் யாரோ ஒரு மூல புருஷன் சீரும் சிறப்புமாகப் பெயரெடுத்து வாழ்ந்திருப்பானுகில் அவன் புகழ் பாடிக்கொண்டு அவன் குடும்பம் வாழ்வதை நாம் இன்றும் காண்கிறோம். ஆக, அன்று வாழ்ந்த ரிஷிகளும் முனிவர்களும் நமது மூதாதையர்கள் என்பதைக் கூறிப் பெருமைப்படுவது இயல்பே.

ஸ்ரீ கி. நா. குமாரஸ்வாமி, மாயவரம் பிரும்மஸ்ரீ ராமநாத தீக்ஷிதர், உபய வேதாந்த பையம்பாடி சேட்டலூர் வா. ஸ்ரீவத்ஸாங்காசாரியார், ஸாஹித்ய வல்லப வங்கீபுரம் வேங்கடராகவாசாரியார் போன்ற பதினெட்டு பெரும் புலவர்களின் கட்டுரைகளும் ஆசாரிய ஸ்வாமிகளின் அருள்வாக்குகளும் இந்த நூலில் இடம் பெற்று நூலுக்குக் கனம் சேர்க்கின்றன. அதோடு ரிஷி மூலம் நதி மூலத்தை அறிவது எவ்வளவு சிரமம் என்பதையும் எடுத்துக் காட்டுகின்றன.

சிறந்த விஷயத்தைக் கையாள முனைந்த இந்த நூல் கதம்பக் களஞ்சியமாகி இருக்க வேண்டாம். ஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் தமது பிரவசனங்களில் அந்தந்த கோத்திரங்களின் பெருமையைக் கச்சிதமாக எடுத்துக் கூறியது போல் இந்த நூல் அமைந்திருக்குமானால் இன்னும் கவர்ச்சியாகவும் தெளிவாகவும் இருந்திருக்கும்.

—ரா. வீ.

பிரசுரம்: விட்டில் பிளவர் கம்பெனி, 8, ரங்கநாதன் தெரு, தியாகராயநகர், சென்னை—600017. விலை: ரூ. 6—50.

ராஜாஜி சிந்தனை

## தவறு செய்யச் சுதந்திரம் ஏது?

ஆண்களும் பெண்களும் தங்கள் விருப்பம் போல் மணம் செய்துகொள்ளச் சுதந்திரம் உடையவர்களாக இருக்க வேண்டும் என்பதே என் உறுதியான நம்பிக்கை. இப்படிக் கூறியதும் திடுக்கிட்டுவிட வேண்டாம். இப்படிக் கூறுவதால் சிறுவர்களும் சிறுமிகளும் ஒருவரை யொருவர் கூட்டிக் கொண்டு ஓடிவிடலாம் என்று நான் கூறுவதாக எண்ண வேண்டாம். நான் கூறுவதெல்லாம் கல்யாணத்தைத் தீர்மானிக்கும் போது வயதானவர்கள் விருப்பத்துக்கு மதிப்புக் கொடுப்பதை விட மணமக்களின் விருப்பத்துக்கே அதிக மதிப்புக் கொடுக்க வேண்டும் என்பதேயாகும்.

தாய் தந்தையர் தீர்மானம் செய்வதாயிருந்தாலும் அவர்கள் ஜாதியைப் பிரதானமாக வைத்துத் தீர்மானம் செய்யக் கூடாது. மணம் என்பதெல்லாம் ஒருவித நட்பு முறையேயன்றி வேறன்று. இரண்டு நண்பர்கள் கூட்டு முறையில் வாழ்க்கை நடத்த விரும்புகிறார்கள் என்பதே அதன் பொருள். ஜாதி வேறுபாடு பாராமல் இருந்தால் நண்பர்களாகவும் இருக்க முடியும்; கூட்டு முறையில் வாழ்க்கை நடத்தவும் முடியும். இதுவரை ஜாதிக் கட்டுப்பாடு மண வினையைப் பாதித்து வந்தது போல் இனிமேலும் பாதித்து வர முடியாது. என் விருப்பம் போல் உண்ண எனக்குச் சுதந்திரம் உண்டு என்று கூறினால் உண்ணத் தகாததையெல்லாம் உண்ணலாம் என்று பொருள் படாது. சுதந்திரம் உண்டு என்று கூறினால் உடனே என்ன தவறு வேண்டுமானாலும் செய்யலாம் என்று அர்த்தமாகாது. அதன் பொருளெல்லாம் ஆண்களும் பெண்களும் தாங்கள் உண்மையாகவே எதை நன்மை என்று கருதுகிறார்களோ அதன்படி நடக்கச் சம்மதிக்கிறோம் என்பதேயாகும். — ஜாதிகள் என்ற கட்டுரையில்



43A + 4A = 47A
43A+4 = 43A+4

# கணிதம் தெரியாதோ?

முன்னாள் முதல்வரின் மடல் கண்டேன். இப்போதெல்லாம் அவர் கடிதங்களில், அது உடன் பிறப்புக்களானாலும் சரி மற்றவர்களுக்களானாலும் சரி, அடக்கமும் பணிவும் தென்படுவது மகிழ்ச்சிக்குரியது.

இதே கலைஞர், முதல்வராயிருந்தபோது தமிழகத்தின் நடுநிலைப் பத்திரிகைகள் நியாய உணர்வோடு, திருத்திக் கொள்ளட்டும் என்ற எண்ணத்தோடு கழக அரசை விமர்சித்த போதெல்லாம் எப்படி நடந்து கொண்டார் என்பதை நாம் மறக்கவில்லை.

வள்ளியூர்
9–7–76 — கே. வி. மோகனன்

தாங்கள் நடுவுநிலை பிறழாது கழகத் தலைவரின் மறுப்புரையை வெளியிட்டது தங்கள் சிறந்த பாரம்பரியத்துக்கு ஓர் எடுத்துக்காட்டு.

மாயூரம்
13–7–76 — ச. இராசேந்திரன்

தலையங்கத்தைப் படித்த யாரும் முழுப் பூசணி மறுப்புரையைப் படித்து ஏமாந்துவிட மாட்டார்கள். அது என்ன, 'இட்டுக்கட்டிய பொய்யுரை' என்று ஒரே போடாகப் போடுகிறாரே. அரசாங்க அதிகாரிகள் எல்லாம் இவரைப் போல் நாவல் எழுதவா சம்பளம் பெறுகிறார்கள்?

சென்னை — 14
13–7–76 — ராமச்சந்திரன்

மறுப்புக் கடிதம் எழுதிவிட்டதாலேயே அவர் குற்றமற்றவராக மாற முடியாது. வேண்டுமானால் தாங்கள் பத்திரிகை தர்மப்படி நடந்து கொண்டதாகக் கருதக்கூடும்.

சென்னை—94
14–7–76 — திருமலை

'மந்திரத்துக்கு மசியும் மஞ்சள் காமாலை' என்று பொருள்படத் திரு தாமஸ் எழுதிய கடிதம் பார்த்தேன்.

வைரஸ் கிருமிகளால் ஏற்படும் மஞ்சள் காமாலைக்கு மருந்து கிடையாது. கல்லீரலுக்குச் சக்தியளிக்க டானிக் தரலாம் அவ்வளவே. ஆனால் வைரஸ் கிருமிகள் அல்லாது வேறு விதமாகவும் கல்லீரல் பாதிக்கப்பட்டு மஞ்சள் காமாலை தோன்றலாம். இத்தருணத்தில் டாக்டர்கள் உதவியும் மருந்தும் அவசியம் தேவை. இல்லாதபோனால் உயிராபத்தாக முடியும். எனவே மஞ்சள் காமாலை நோய் கண்டவர்கள் மந்திரத்தில் நம்பிக்கை கொண்டிருந்தாலும் கூடவே டாக்டர்களையும் அணுகி ஆலோசனை பெறுவது நல்லது.

கோவை—14
3–7–76 — ஜி. என். லட்சுமிநாராயண்

'குட்மார்னிங் டாக்டர்' பகுதியில் ஒரு சிறு தவறு. புட்டாளம்மை வைரஸ் கிருமிகளை பெனிசிலின், அக்ரோமைஸின் போன்ற ஆன்டிபயாடிக் மருந்துகளின் மூலம் ஒழித்துவிட முடியாது. வைரஸ் கிருமிகளைக் கொல்லும் மருந்துகள் மிகச் சிலவே. அம்மருந்துகளின் சக்தியும் சந்தேகத்துக்கு உட்பட்டதே.

புட்டாளம்மை நோயாளிக்கு எதிர்ப்புச் சக்தி குறைந்துவிடுகிறது. அதனால் வேறு கிருமிகளால் தொற்றுநோய் உண்டாகலாம். (Secondary Infections) இதனைத் தடுப்பதற்கே ஆன்டிபயாடிக் மருந்துகள் கொடுக்கப்படுகின்றன. (Prophylaxis Against Secondary Infections) வைரஸ் கிருமிகளைக் கொல்வதற்கல்ல.

சென்னை—7
1–7–76 — டாக்டர் ஸ்ரீனிவாசன்

அடியேன் திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகளின் திருத் தொண்டுகள் குறித்து டாக்டர் (பி. எச். டி.) பட்டத்துக்கு ஆராய்ச்சி செய்து வருகிறேன். அவரது திருப்பணிகள், அவர் இயற்றிய — எழுதிய நூல்கள், அவரது சொற்பொழிவுகள் ஆகியவற்றைப் பதிவு செய்தும், அவ்வப்போது வெளியிட்டும் மகிழ்ந்த பெரியோர்கள் அவைகளைப் பற்றிய குறிப்போ, அல்லது அதன் பிரதிகளையோ எனக்குக் கொடுத்தருளினால், என் ஆராய்ச்சி சிறக்க வழிசெய்வதுடன், தங்களுக்கும் சிறப்பிடம் உண்டு என்பதை மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இராமேசுவரம்
23–6–76 — சி. அரங்கசாமி

பானுசந்திரன் அவர்கள் எழுதிய நிகழ்ச்சி துணுக்கு கண்டேன். 47ஏ பஸ் வரவில்லை, நீண்ட நேரமாக. 36ம் எண்ணுள்ள பஸ் 11ஏ பஸ் இரண்டும் வந்தது. ஒருவர், ''எல்லோரும் இரண்டு எண்களையும் கூட்டிக் கொள்ளுங்கள். 47 ஏ. வரும்'' என்று கூறியவுடன் எல்லாரும் வேதனையை மறந்து சிரித்ததாக எழுதியிருந்தார். கணித முறைப்படி 36ஐயும் 11ஏ-ஐயும் கூட்டினால் ''36+11ஏ''தான் வரும். அவர் கூறியது போல் ''47ஏ'' வராது. (36A+11A=47A).

மதுரை — 2
25–6–76 — அ. சு. மணியன்

திரு நா. பார்த்தசாரதியின் 'புது உலகம் கண்டேன்' கட்டுரைத் தொடர் ஒரு தனி இலக்கிய வகையைச் சார்ந்ததாக அமையக் கூடும். அதற்கான அறிகுறிகள் துவக்கத்திலேயே தென்படுகின்றன.

திருப்பூர்
11–7–76 — க. கிருஷ்ணன்

புதியது!

# ஸைட்ரோலேன் 5-ஜி

ஸிஸ்டெமிக் பூச்சி கொல்லி

## நெற் பயிரைத் தாக்கும் எல்லாவித பூச்சிகளையும் தீர்த்துக் கட்டுகிறது.











ஸைட்ரோலேன் 5-G
பூச்சி கொல்லி




பெரும்பாலான தீவிரமான நெற்பயிர்ப் பூச்சிகளை முழுமையாகக் கட்டுப்படுத்துவதற்கு இந்தியாவிலேயே இந்த ஒரு பூச்சிகொல்லி எனக்கூறலாம். தண்டு துளைப்பான், கள்ளிப்பூச்சி, சுவைப்பான்கள், இலை மற்றும் செடித்தாவிகள் போன்ற எளிதில் மடியாத பயிர்ப்பூச்சிகளைத் தீவிரமாகத்தாக்க ஸைட்ரோலேன் 5-ஜி ஒரு திறம் வாய்ந்த பூச்சி கொல்லியாகும். இந்தியாவின் பற்பல பாகங்களில் AICRIP† நிறுவனத்தால் நடத்தப்பட்ட புதிய பூச்சி கொல்லிப் பரிசோதனைகளின்படி, அடுத்தடுத்து பல பருவங்களிலும், பல வருடங்களுக்கும் ஸைட்ரோலேன் 5-ஜி வியக்கத்தக்க முறையில் நெற்பயிர்ப் பூச்சிகளைக் கட்டுப்படுத்தி நெல் விளைச்சலைப் பெருக்கியுள்ளது. ஸைட்ரோலேன் 5-ஜி விவசாயப்பல்கலைக் கழகங்களாலும், மாநில விவசாயத் துறையினராலும் சிபாரிசு செய்யப்படுகிறது. குருணை வடிவிலுள்ள திறம் வாய்ந்த ஸைட்ரோலேன் 5-ஜி பல பயிர்ப் பூச்சிகளின் வேலையை தனியாகவே செய்து விடுகிறது. அது இரு திறம்மிக்க முறையில் செயல்படுகிறது. ஸிஸ்டெமிக் மற்றும் காண்டாக்ட் முறை. நெற்பயிரின் வேர்கள் வரை ஊடுருவிச்சென்று முழுப்பயிரிலும் பரவுகிறது. சுவைத்து, உறிஞ்சும் பலவித பயிர்ப் பூச்சிகளை ஒழித்துக் கட்டுகிறது. ஆரோக்கியமான விளைச்சலை உறுதி செய்கிறது.

அபாயமற்றதும், சௌகரியமாக உபயோகிக்கக்கூடியதுமான ஸைட்ரோலேன்-5ஜி எந்தப் பருவத்திலும் உபயோகிக்கலாம். நெல் வயல்களில் இக் குருணைகளைத் தெளிக்க வேண்டும், அவ்வளவுதான். கலக்க வேண்டிய தொல்லையோ, இடைஞ்சலான கருவிகளோ தேவையில்லை.

நெற் பயிரை வேண்டுமென்றே அழிக்கும் பயிர்ப் பூச்சிகளிலிருந்து பாதுகாருங்கள். ஸைட்ரோலேன் 5-ஜி முன் கூட்டியே பிரயோகம் செய்யுங்கள்.

CYANAMID ஒவ்வொரு உழவருக்கும் நம்பிக்கையூட்டும் உன்னதமான பெயர்

அக்ரிகல்ச்சரல் டிவிஷன்
**ஸயனமைட் இந்தியா லிமிடெட்**
பி. ஓ. பாக்ஸ் 9109 பம்பாய் 400 025

† ஆல் இந்தியா கோ-ஆர்டினேடெட் ரைஸ் இம்ப்ரூவ்மெண்ட் ப்ராஜெக்ட்



CIL 002 TAM

# கதர் சட்டை

## எஸ்.வி.எஸ்

நான் கதர் துணியை அணிபவன். கிட்டத்தட்ட முப்பத்திரண்டு ஆண்டுகளாக அணிந்து வருகிறேன். ஆரம்பத்தில் தேசபக்தத் திருக்கூட்டத்தில் நானும் ஒருவன் என்று எண்ணிக் கொள்வதில் ஒரு பெருமிதம் இருந்தது. தேசம் சுதந்திரம் அடைந்து சில ஆண்டுகளுக்குப் பிறகு 'ஏனடா கதர் அணிகிறோம்' என்று வருந்தலானேன். இரண்டொரு முறை வண்ணான் கொண்டு வந்திருந்த சலவைத் துணிகளிலிருந்த எனது சட்டைகள் அனைத்தும் ஒன்று போலக் கிழிந்திருந்தன. ஆம். ஒரு தடவையில் ஆறு புதுச் சட்டைகள் வாங்கினால் கிழியும்போதும் ஆறு சட்டைகளும் சேர்ந்தாற்போல் கிழியும். அவ்வளவு தேச பாவம்! இதையெல்லாம் நினைத்து இனிக் கதர் வாங்கக் கூடாது இனி டெர்லினோ, டெர்ரி காட்டனோ வாங்க வேண்டும் என்று புறப்பட்டால் என் கால்கள் என்னை அறியாமல் கதர்க் கடையில்தான் கொண்டுபோய் விடும்!

ஆகவே, நான் சற்று மனத்தாங்கலுடனேயேதான் கதரை விடாமல் உடுத்தி வருகிறேன். ஆனால் நேற்று நடந்த ஒரு நிகழ்ச்சி என்னை மெய் சிலிர்க்க வைத்து விட்டது. நல்ல காலம் தவறு செய்யாமல் பிழைத்தோமே, கதரை விடாமல் இருந்தோமே என்று என்னைப் பாராட்டிக் கொண்டேன்.

நேற்று தியாகராய நகர் பஸ் நிலையத்தில் 12-ஏ பஸ்ஸுக்காகக் காத்திருந்தேன். பலர் என்னைப் போல் காத்துக் கொண்டிருந்தனர். அவர்களில் ஒருவர் என்னை ஏதோ ஒருமாதிரி பார்த்தாற்போல் தோன்றியது. நான் பொருட்படுத்தவில்லை. அதற்குள் பஸ் வந்து நின்றது. பிரயாணிகள் முண்டியடித்துக் கொண்டு ஏறினர். உட்கார இடம் பிடிக்கும் ஆவல் அவர்களை அப்படி மோதிக்கொண்டு ஏறச் செய்தது. நானும் விதிவிலக்கல்ல. சிரமப்பட்டு ஏறி ஸீட்டில் ஜன்னல் ஓரமாக உட்கார்ந்து கொண்டேன். அடுத்த கணம் என்னை விசித்திரமாகப் பார்த்த அந்த நபர் என் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டார். நான் அவரைக் கவனிக்காதது போலிருந்தேன்.

அவர் பேச்சுக் கொடுத்தார்: ''ஸார்! நீங்கள் 1942ல் வேலூரில் இருந்தீர்களா?'' என்று கேட்டார்.

''அப்போது நான் அங்கு போனதில்லை. அதற்குப் பிறகு எத்தனையோ முறை அங்கு போயிருக்கிறேன்'' என்றேன்.

''பிறகு போனதைப் பற்றி எனக்கு அக்கறையில்லை. 42ல் நீங்கள் வேலூர் சிறையில் இருந்தீர்களோ என்று கேட்க வந்தேன்'' என்றார்.

''நான் 42க்கு முன்பிருந்தே கதர் போடுபவனாயினும் நான் சுதந்திரப் போராட்டத்தில் கலந்துகொண்டு சிறை செல்லும் பாக்கியம் பெற்றவனல்ல'' என்றேன்.

''உங்கள் முக ஜாடையில் அங்கு ஒருவர் வேலூர் சிறையில் இருந்தார். அதனால்தான் கேட்டேன். அந்நாட்களில் எப்படிப்பட்ட உயர்ந்த தலைவர்கள் எல்லாம் வேலூர் சிறையில் இருந்தார்கள்!'' என்று பழைய நினைவுகளில் மூழ்கி மெய் புளகித்துப் போனார்.



"நீங்கள் அப்போது வேலூர் சிறையில் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?'' என்றேன்.

''வேலூர் சிறைக் காரியாலயத்தில் ஒரு குமாஸ்தாவாக இருந்தேன். சிறைக் கைதிகளுக்கு வரும் கடிதங்களைப் பரிசீலனை செய்யும் பொறுப்பில் இருந்தேன். எனினும் நான் அப்போது சிறுவன். பதினெட்டு வயது. சிறையிலிருந்த பெருந் தலைவர்களின் பெருமையைப் பூரணமாக அறியாத நிலையில் இருந்தேன். அதை இப்போது நினைத்தால் கூட வருத்தமாக இருக்கிறது. எப்படிப் பட்ட தியாக சீலர்கள்! அவர்களிடம் நெருங்கிப் பழகும் வாய்ப்பு இருந்தும் பூரணமாகப் பயன்படுத்திக் கொள்ளத் தவறிவிட்டேன். நான் அங்கு இருந்தபோது, வினோபா அடிகள் இருந்தார்... ஆனால் அப்போது எனக்கு அவருடைய முழுப்பெருமையும் தெரியாது. என்னைப் போல் பேதையுண்டா?'' என்று வருத்தப்பட்டார்.

இதைத் தொடர்ந்து அந்த நாட்களில் வேலூர்ச் சிறையிலிருந்த வடநாட்டு, தென்னாட்டுத் தலைவர்கள் பெயர்களையும் அவர்கள் ஒவ்வொருவர் தோற்றத்தையும் பழக்க வழக்கங்களையும் சொல்லி வந்தார்;

''இவர்களில் ஒருவர் வடநாட்டைச் சேர்ந்த பெரும் பணக்காரர். பிர்லா குடும்பத்தினருடன் சம்பந்தம் வைத்துக் கொண்டவர் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.

''அப்படிப்பட்டவருக்குத் தினம் ஏராளமான கடிதங்கள் வரும். வியாபார சம்பந்தமான கடிதங்கள், குடும்பத்தாரிடமிருந்து கடிதங்கள் — இப்படி வரும். இவற்றில் வாரத்துக்கு இரண்டு நாட்கள், இரண்டு கடிதங்கள்தான் கொடுப்போம். இவருக்கு வரும் இத்தனை கடிதங்களைப் பார்க்கும்போது, எனக்கு இவற்றில் ஒன்று கூடக் கொடுக்க முடியாதே என்று வருத்தமாக இருக்கும்.

''கைதியிடம் கேட்போம்: 'உங்களுக்கு யாரிடமிருந்து வரும் கடிதம் பார்க்க வேண்டும் என்று விரும்புகிறீர்கள்? வியாபார சம்பந்தமான கடிதமா? வீட்டு விவரம் தெரிவிக்கும் கடிதமா?' கோடிக்கணக்கான ரூபாய் புரளும் வியாபாரமாயினும், அவருக்குப் பாசமெல்லாம் தம் குடும்பத்தார் மீதுதான்.

''அந்தப் பணக்காரர் 'என் குடும்ப க்ஷேம சமாசாரத்தைத் தெரிவிக்கும் கடிதங்களைக் கொடுங்கள்!' என்பார்.

''ஒரு தடவை அவருடைய ஒரே மகளுக்கு ஆபரேஷன் ஆகியிருந்தது. அதைப் பற்றி இரண்டு மணி நேரத்துக்கு ஒரு தந்தி வீதம் அவள் நிலைமையை விளக்கித் தந்திகள் வந்த வண்ணமிருந்தன. தந்திகளுக்குச் சிறையில் விசேஷ மரியாதை கிடையாது. கடிதம் போல்தான் கருதுவோம். தந்திகள் வர வர நான் அவற்றைப் பெற்ற தந்தைக்குக் காட்டாமல் கட்டி வைப்பது எனக்கே ஆற்றாமையாக இருந்தது. தந்தையின் உள்ளம் என்ன பாடு படும் என்று அறிந்து, அவருக்கு ஆறுதல் அளிக்க அல்லவோ இத்தனை தந்திகள் கொடுக்கிறார்கள். தந்தி கொடுப்பவர்களுக்குப் பாவம், வாரத்துக்கு இரண்டு கடிதங்களுக்கு மேல் கைதிக்குக் கொடுக்க முடியாது என்ற விதி இருப்பது தெரியாது போலும். என் மனம் படாத பாடு பட்டது. நேரே அவரிடம், 'ஐயா! உங்களுக்குச் சென்ற வாரம் மட்டும் 126 கடிதங்கள் வந்துள்ளன. அவற்றைப் படிக்கக் கொடுக்கிறேன். ரகசியமாகப் படித்துவிட்டு எனக்குத் திருப்பிக் கொடுத்து விடுங்கள். இவ்விஷயம் தவறிப்போய்க்கூட நீங்கள் யாரிடமும் சொல்லிவிடக் கூடாது!' என்றேன்.

''அதற்கு அவர், 'உன் வேலைக்கும் உனக்கும் ஆபத்து விளைவிக்கக் கூடிய துணிகரமான செயலைச் செய்கிறேன் என்கிறாயே! இதைச் செய்யத்தான் வேண்டுமா? யோசித்துச் செய்! ஜாக்கிரதை! ஜாக்கிரதை!' என்றார்.''

இப்படிச் சொல்லி வந்தபோது என் சக பிரயாணியின் கண்கள் பனித்து விட்டன. ''இப்படி யார் ஸார் சொல்வார்கள்? சிறையில் இருப்பவர்களுக்கு வெளி விவகாரம் தெரிந்து கொள்வதில் ஒரே ஆர்வமாக இருக்கும். அதிலும் உள்ளத்தோடு உள்ளம் ஒட்டிப் பிணைக்கும் ஸம்வாதம் புரியும் கடிதங்களைப் பெறுவதில் எவ்வளவு ஆர்வம் இருக்கும் என்று சொல்லத் தேவையில்லை. அந்நிலையில் ஒருவன் கடிதம் தருகிறேன் என்றால், 'கொண்டா! கொண்டா!' என்று ஆலாகப் பறக்கத்தான் தோன்றுமே தவிர, கொடுப்பவனுடைய க்ஷேமலாபத்தை நினைக்கத் தோன்றாது. ஆனால் இவரோ என்னுடைய நலனையே முக்கியமாகக் கருதி எச்சரிக்கை செய்தாரே! இப்படி யார் ஸார் சொல்வார்கள்?'' என்று கூறினார். அவர் கண்களில் நீர் மல்கிவிட்டது.

''அவரிடம் எனக்கு இருந்த பெரு மதிப்பினாலும் பேரன்பினாலும் துணிந்து அவருக்கு அன்றிரவு ரகசியமாகக் கடிதங்கள் கொண்டு போய்க் கொடுத்தேன். அவரும் என் ரகசியத்தை அப்படியே காப்பாற்றினார்.

''இப்படிப்பட்ட பெரிய மனிதர்களுடன் பழகிவிட்டு, சாதாரண சிறைக் கைதிகளுடன் பழக முடியாமல் 44ம் ஆண்டு அந்த வேலையை ராஜிநாமாச் செய்தேன்.

''இன்று உங்களைப் பார்த்ததும், உங்கள் கதர்ச் சட்டையைப் பார்த்ததும் என் மனம் அந்தப் பழைய இனிய நினைவுகளில் ஆழ்ந்தது. வாழ்க்கையில் பெறற்கரிய பேறாகக் கிடைத்த அந்த நாட்களை நினைவுகூர்ந்தது.''

இதற்குள் பஸ் கண்டக்டர் ''அபிராமபுரம், அபிராமபுரம்!'' என்று குரல் கொடுத்தார்.

என் சக பிரயாணி, ''நான் வருகிறேன், ஸார்!'' என்று சொல்லிவிட்டு இறங்கி வேகமாக விரைந்தார்.

பஸ் நகர்ந்தது.

'என் கதர்ச் சட்டை, பதினைந்துநிமிஷங்கள் ஒரு சகப் பிரயாணியைச் சிறந்த தேசபக்த தியாகசீலர்களை நினைவுகூர வைத்து, இன்பத்தில் ஆழ்த்தியதே, எவ்வளவு சக்தி இதற்கு! இவ்வளவு அருமையான சட்டையையா நொந்து கொண்டோம்? அணியக் கூடாதென்று நினைத்தோம்?' என்று எண்ணி வெட்கப்பட்டேன். அப்படி வெட்கப்பட்டுத் தலை குனிந்தபோது அன்றுதான் சலவை செய்து வந்திருந்த அந்தச் சட்டையில் சிறு கிழிசல் தெரிந்தது. எனக்குப் பெருமை தாளவில்லை!

---

**வதந்தி!** 'வதந்திகள் குறைந்து போய் விட்டன' என்று ஒரு வதந்தி அடிபடுகிறது.

'காரவான்' — கே. ஆர்.

ஏ.எஸ்.பி

## குட்டிக் கதைகள்

## முட்டாள் அழித்த ஜோக்!



வறுமையும் செல்வமும் ஒரு போட்டி வைத்தன. யாரால் மக்களைச் சிரிக்க வைக்க முடியும் என்று போட்டி.

வறுமை அசாதாரணமான புத்திசாலித் தனத்தை ஒரு மனிதனுக்குக் கொடுத்து அவனை 'ஜோக்' அடிக்கச் செய்தது. ஆனால் யாரும் அந்த ஜோக்குகளைக் கேட்டுச் சிரிக்க வில்லை. அவன் தொடர்ந்து சிரிப்பு வெடிகளை உதிர்த்தபோது, ''போய்யா போ'' என்று விரட்டினார்கள்.

செல்வம் ஒரு முட்டாளைப் பணக்காரனாக்கியது. பேச வைத்தது. மக்கள் அவனைச் சூழ்ந்து கொண்டு அவன் வாயிலிருந்து என்ன வார்த்தை உதிர்ந்தாலும் ஓஹோஹோ என்று சிரித்தனர். படு இராபையான ஜோக்குகளும் பாராட்டைப் பெற்றன!

நீதி: நீங்களே எழுதிக் கொள்ளவும்.

## சத்திய சந்தன்!



நரியின் தொல்லை தாங்காத கோழி, ஓநாயின் பாதுகாப்பை நாடியது. ஓநாய் அபயம் அளித்தது. நரி கோழியைத் துரத்திய போது அது ஓநாயின் கரங்களில் தஞ்சம் புகுந்தது. ஓநாய் அதைக் கைவிடவில்லை. இறுகக் கட்டி மரணப் பிடியில் வைத்தது. கோழி, ''இது என்ன அநியாயம்?'' என்றது. ஓநாய் பதில் அளித்தது : ''உன்னை நரியிட மிருந்து காத்தேனா இல்லையா? வாக்குறுதியை நிறைவேற்றிவிட்டேன். என்னிடமிருந்து உன்னைக் காப்பதாக நான் வாக்குத் தரவில் லையே!''

நீதி: நீங்களே எழுதிக் கொள்ளவும்.

## கழுதையின் பெருமை!



ஒரு நரியும் ஒரு கழுதையும் சிங்கத்திடம் தங்கள் வணக்கங்களைச் சமர்ப்பிக்கச் சென்றன. சிங்கம் வேட்டைக்குக் கிளம்பிக் கொண்டிருந்தது. ''நீங்களும் வருகிறீர்களா?'' என்று கேட்டது. நரி, ''மன்னித்துக் கொள்ளுங்கள். வேறு முக்கிய வேலை இருக்கிறது'' என்று கூறி நழுவியது. கழுதை தனக்குச் சிங்கமே அழைப்பு விடுத்ததில் பெருமையுற்றது. சிங்கத்தோடு சென்றது. ஆனால் அன்று சிங்கத்துக்கு ஒரு வேட்டையும் கிடைக்கவில்லை. அதற்கிருந்த பசியில் அது கழுதையை அடித்துச் சாப்பிட்டுவிட்டது!

நீதி: நீங்களே எழுதிக் கொள்ளவும்.

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam Associate Editor: K. Rajendran.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசிய காசு

# 27 COUNTRIES COURT JUBILEE RIMS!

27 countries import JUBILEE RIMS... An enviable honour. Yet it is the result of the satisfactory service that JUBILEE RIMS offer. Sturdy construction and consistent quality are the hall-marks of JUBILEE RIMS. No wonder, they are used as original fitment by leading bicycle manufacturers in many Asian and African countries.

*Manufactured by*
*the leading rim exporters of India:*

**THE WHEEL & RIM CO.**
**OF INDIA LTD.**

Huzur Gardens, MADRAS-11

*also marketing :*

**SADDLES, SPOKES, HUBS & GEAR CASES.**

**a unit of the Amalgamations Group*

